கண்டிடா ரிஷியினொடு முனிவர்தேவர் கணநாதர் சித்தர்களும் யோகிஞானி, யொண்டிடார் பலநூலும் பலமுகமாய்ப்பாடி யூரிலே யலைந்திடவும் பித்தரெல்லாம், கண்டிடாக் கற்பங்க ளமுதமுண்ணார் கருவிபுறக்கருவிகளுங் காணார்காணார், பண்டிடார் செகங்கண்டி மறைத்தடித்தார் பார்த்தறிந்தோன் மெய்ஞ்ஞானி பார்த்திடாயே. 510

பார்த்திடவே ரண்டுபலந் தாரம்வாங்கிப் பாங்காகவே நறுக்கிப் பண்பாய்மைந்தா, சேர்த்திடவே சாரணையைச் சமூலமாட்டிச் செப்பரிய சட்டிக்குள் முக்காலிட்டு, வார்த்திடவே சட்டிமேல் தாரம்வைத்து மறுபடிபின்சாரணையை வைத்துமூடி, நேர்த்திடவே சில்லிட்டுச் சீலெசெய்து நினைவாகமூடியேழு மண்ணுஞ்செய்யே 511

மூடிநீதியெரிப்பாய் சாமம்நாலு முதிரவது வாறியபின் னிறக்கி வைத்து, நீடிநீ சட்டிக்குள் பற்றித்தீய்ந்து நின்றதெல்லாங் களைந்து மற்றதெல்லாம்பற்ற, மூடிநீ கல்வத்தில் தூளாயாட்டி யுற்றசிறு குழ விலே யடைத்துவைத்து, நாடிநீ பதினெட்டுக் குட்டந்தீர்க்க நல்வீரப்பெருக்குடனே கிராம்புசேரே. 512

சேரப்பா சமபாகந் தயிலம்வாங்கிச் சிறப்பாகப் பணவெடைதான்றயிலத்துள்ளே, ஆரப்பாபற்றத்திற் பணத்திற்பாதி யளிதநிடவே குட்டமொடு புண்கள்நோயாம், பேரப்பா வொழிந்துவிடும் தேனுங் கூட்டு பிலத்தூட்டு பட்சமொன்று பிரிந்துபோகும், கோரப்பா வொழிந்துவிடு மிவைக்கெல்லாம் பத்தியங்கேளு நெய்யாகும் பாலாகும் பழமுமாமே. 513

பழமாகும் வெள்ளாட்டி னிறைச்சியாகும் பருமாத்த வெந்நீரும்பருவம்வேணும், சளந்தீரு மிரதசெந் தூரஞ்சொல்வோம் சகலசங்க நோய்க்கெல்லாஞ் சஞ்சீவியாகும், விளந்தீருங் கெந்தியொன்று தாரமொன்று மிச்சுகவ்வற்பட்டையொடு அரசம்பட்டை, அளந்தீரும்பருத்தியிலை பாகலிலைசேர் அப்படனே சரியிடையாய்ச் சேருசேரே. 514

இரசபற்பம்.

சேர்த்ததனை மயனம்போ லாட்டிவாங்கிச் செப்புகிறேன்புதுச்சட்டிக்குள்ளேநீயு, மாத்தமுர்த மூன்றுபடியுப்புமிட்டு மயனமென்ற மருந்ததற்குள் நடுவேவைத்து, வார்த்திடுவாய் சூதமதிற் பலந்தானென்று மறுபடியும் நீமருந்தாலே குழியைமூடி, சாத்தியேசில்லிட்டு சீலெசெய்து தணலூட்டிப் பதின்மூன்றுகடிகைதானே. 515

பதின்மூன்று கடிகைநீ யெரித்துவாங்கு பதத்தோடே செந்தூரமருணன்போலாம், விதிநூறுவகுழலிலேயடைத்துக்கொண்டு மிஞ்சியதோர் சட்டிக்குள் வெல்லமிட்டு, மாநாறும் பிராட்டியந்தவெல்லந்த

ன்னே மாட்டுவாய்ப் பருத்திவிரைப் பிரமாணத்தில், கநிகாறுபதினெ
ட்டும்சூலைதீரும் கரும்புட்டிப் பணவிடையில் வெல்லமீட்டே. 516

வெல்லத்தி னூட்டிடவே பக்கசூலை மேல்சூலைகால் சூலைகுண்டி
சூலை, வெல்லத்தினூட்டிடவே தசையில்சூலை வீக்கமொடுபுண்பிளவை
முழந்தாள் சூலை, வெல்லத்தை யூட்டிடவே சந்துநோயும் மொய்க்கு
டைச்ச லெலும்புருக்கி விரணம்போகும், வெல்லத்தி னூட்டிடவே
நோய்களெல்லாம் விரடங்கும்பத்தியங்கள் முருங்கைத்தண்டே. 517

தண்டுடனே துவரையா மற்றொன்றுகா தண்ணீர்தான்வெந்நீரா
ந்தாழ்ச்சியின்றி, மிரண்டுபுரி நோக்கெல்லாஞ் சத்தஞ்சூதம் வெள்ளை
யாஞ்செய்கிற விபரங்கேளு, மொண்டுவா மிரண்டுபலச் சூதங்கல்லில்
மூவிலை மின்னைச்சார் முழங்கவிட்டு, கண்டிநமாய்க் கடிகைதா னாறு
மத்தி கனக்கவதை மூன்றுண்டை கட்டுகட்டே. 518

கட்டினதைச் சட்டிநடு வைத்துநீடுங் கனலூட்டுநாற்கடிகை பின்
புகேளு, தட்டியே சுரையெல்லாங் கிண்டிக்கிண்டித் தான்வறுப்பாய்
நாற்கடிகை தப்பாதப்பா, தட்டியன்றிச் சூட்டடா கல்வத்திட்டுச்
சுருளவே நாற்கடிகை தூளாயாட்டி, கொட்டியிடு குழலிலே பதனம்
பண்ணிக்கொள்ளடா வனுபானங் கூறுநேனே 519

பரங்கிப்பட்டைரசாயனம்.

கூறக்கேள் பணவிடைநீ பற்பந்தீர்த்து குளிர்ந்திருந்தவெல்லத்
தில் குணத்தைக்கேளு, மீறக்கேள் பெருஞ்சூலை பக்கசூலை விலைநோயு
ம்பழுவெலும்பு வீக்கந்தூக்கம், ஏறக்கேள்குன்மம்போ மவத்தைசூலை
எட்டுவகைச் சூலையெல்லா மிதமாம்பாரு, பாறக்கேள் பட்டைமேல
ரசாயனத்தைச் சொல்வோம் பட்டையஞ்சு பலம்வாங்கு வெள்ளைப்
பாகே. 520

பட்டைதனைத் தூளாக்கி யெடுத்துக்கொண்டு பகரோம மதிவி
டையம் குராசானிஓமம், கட்டையெனுஞ்சாதிக்காய் சாதிபத்திரி
கிராம்புசுக்கு திரிபலைநன் மிளகுசேர்த்து, தடைபண்ணி வகைக்குநீ
பலமுங்கால்தான் தளராட்டிப் பாண்டத்தில் வழித்துநீயும், இட்ட
முடன் பட்டைத்தூள் கூடச்சேர்த்து இவையெல்லாஞ் சுயவாவின்
பாவிதமாயூற்றே. 521

இதங்கேளு பசுவினெய்யோர் படியும்விட்டு இளக்கியே குழம்பா
க்கியடுப்பிலேற்றி, இதங்கேளு கமலவன்னி கடிகையொன்று மெந்தி
டவும்விடாமலே கிண்டிக்கிண்டி, பதங்கேளு மயனம்போல் பக்குவத்
தைப் பார்த்துப்பற்றும் விளக்கிநன்றாய் மைந்தாகேளு, மதங்கேளு
ஆறுபலச்சீனிதாக்கி மறுபடியும் சப்பையால் சீனிகிண்டே. 522

சீனியிட்டுக்கிண்டி யொரு கசைத்திட்டுத் தினமூன்றுசென்றபின் பு தான்றிக்காய்போல், சீனியிட்டுவைத்திருந்த மருந்தைவாங்கித்திர ட்டிடுவா யிருவேளை தின்றபோது, சீனியிட்டுமண்டலந்தா னருந்தினு க்கால் திருகிறநோய்கேளுகிராணிசூலை, சீனியிட்டுப்பாறங்கிப்புண் வெ ட்டைக்குட்டை சிரசில்வருஞ்சூலைமுதற் சரப்பன்போமே. 523

சூலைபோங்கபாலத்திற்குட்டம்போகுந் துயர்விளைக்கும் நாவத னிற்சூலைபோகும், சாலைபோம்வெடிசூலை நெஞ்சுசூலைதட்டிமிதித்தொ டித்தாற்போல்சரீரசூலை, சிலைபோக்கழல்வாதந்தந்தவாதந் தீருந்தியெ ரிக்கும் விலாவெலும்புவீக்கஞ்சோகை, காலைபோமுடைச்சூலை பக்கச் சூலை சரப்பன்முதலனைத்துமே கழன்றுபோமே. 524

## குருமுன்னிற்கவும்.

போகின்ற வியாதிக்குப் பத்தியத்தைச் சொல்வோம் புலத்திய னேசண்டாளியே ஞானமூர்த்தி, வாவதற்குச்சரீரங்கள் பிலமறிந்துவத் தின்முன் பித்தவெட்டை வாதவெட்டையானால், பாவதற்குப்புளியுப் பைமாறச்சொல்லிப் பருங்கோழி முருங்கைக்காய்துவரையாம், ஆவ தற்குமுசலுடும்புகீரைத்தண்டு அப்பமனைசிறுகீரை பாங்குகேளே. 525

பாங்குகேள்மிளகுமஞ்சள் வெந்தயமீருள்ளி பரிவானவெள்ளு ள்ளிசீரகங்கருவேம்பு, பாங்குகேள் பெருங்காயம் பத்தியத்துக்காகும் பனைவெல்லம் நல்லவெல்லமிரண்டுமாகும், பாங்குகேளிப்படியே சாப் பிட்டாக்கால் பற்றற்றுவல்வினையுமாறிப்போகும், பாங்குகேள் வாத வுடல்தூலகாசம் பத்தியஞ்சித்துப்பிட்டுப் பார்க்கச்சொல்லே. 526

## காமாலைக்குதசமுகவு தயாக்கினிசெந்தூரம்.

பாரப்பாலோகமென்ற வுருக்குதன்னைப் பாடுகிறேன் காமாலைப் பாண்டுதீர, சீரப்பா பேதிகண்டு பேர்கட்கெல்லாந் திசமுகயுதயாக் கினி செந்தூரமென்பார், சேரப்பா சூதமொன்றி கெந்திரண்டு சிறப் பான காந்தமது பலமும்நாலு, நேரப்பா வுருக்குத்தூள் பலமும்நாலு நெகிழாட்டுக் கற்றாழைச் சாறுவார்த்தே. 527

கற்றாழஞ்சாற்றினால் கடிகைநாலு களிபோலே யாட்டியேவில்லை கட்டி, வற்றாழைச்சட்டியிலே யாவிலையைப்பரப்பி மேல்வைத்து வில்லை தனை யிலையால்மூடி, கொத்தாவரைச்செய்து மண்ணுஞ்செய்து கொடி யதோரடுப்பேற்றித தீயைமூட்டி, முத்தாழமூன்றுபத்துக் கடிகையங் கே மூட்டிநீபார்ப்பளவில் செந்தூரமாமே. 528

ஆதியதோர் செந்தூரந் தூளாயாட்டி யடைத்திடுவாய் முறா யிலே யன்பாய் மைந்தா, பாகியதோர் சுக்குத்தூள் விராகனென்றில் பாய்ச்சடா செந்தூரம் பணந்தான்மூன்று, வாகியதோர் நெய்தேனி லுண்ணச்சொல்லு வலியதொரு பெருவயிறு காமாலைசோகை, ஏகிய தோர் பாண்டுபித்தம் விஷபாகந்தானும் விந்தனத்தில் விழ்ந்தியபோ லெரியுந்தானே. 530

லோக செந்தூரம்.

தானென்ற யுதயாக்கினி திசமுகசெந்தூரஞ் சாற்றுகிறேன்அரப் பொடியுமரசு கெந்திகாந்தம், தேனென்றவகைபொன்று கழஞ்சிரண்டு சிதருமற் கற்றாழஞ்சாற்றிலாட்டு, மானென்றகலசத்திலிட்டுவைத்து வாய்மூடிப் பார்த்திருக்க வேகும்பாரு, கானென்றசாற்றாலே யாறவிட் டுப் பின்புகலராட்டி மூன்றுதரம் வேகவையே. 531

கலந்ததோர் மருந்தங்கேயாறினக்கால் கல்லிட்டு ஆர்க்கவே தூளாயாட்டி, அலர்ந்ததோரனுபானம் வாய்வுக்கானால் அப்பனேதிரி கடுகு பொடியைச்செய்து, குலர்ந்ததொருபர்பத் தில்பணவிடைதான் கூட்டியே பொடியிரண்டு காசிடையிற்சேர்த்து, வலர்ந்ததொரு வுட் கொள்ளத் தேனிற்சேரு வாய்வுவருஞ் சன்னிக்கு வரிசைகேளே 532

வரிசைபெறச்செந்தூரம் பணவெடைதான்ரண்டு வாங்கிநீ வெள் ளுள்ளித் தயிலத்தூட்டு, வரிசைபெறப் பிரமேகந் தீரவென்றால் மரு தோன்றிச் சாற்றிலூட்டு வண்மையாக, பரிசைபெற எரிகுன்மம் போகவென்றால் பருஞ்சீந்திற்றண்டுடனே பரிவாயூட்டு, உரிசைபெற வாதங்கள் தீரவென்றால் உற்றநொச்சிக் கொடிவேலி கொழுஞ்சிவேளை தானே. 533

வேளையில் முருங்கைத்தோல் சாற்றிலாதல் விரைந்திடவே வாத ய்போ மிகுதியாகில், நாளையிலே பெருங்காயந்தன்னி லாட்டு நல்லமஞ் சள்காமாலை நாசமாக, தூளையிலைப் பூவரிசிச் சீரகமும் நோய்த்தூளா ட்டிப்பாலிலே யுண்ணப்போகும், வேளையிலே யந்திசந்தி கொண்ட போது வீறிட்டு அடங்கிநோய் பிடியுங்காக்கே. 534

பிரிவுக்குக்கோடா சூரிக்குளிகை.

பிடித்ததொரு காக்கையிட வாயிற்கேளு பெருக்கவே யுப்பிட்டு விடத்திரையின்விறகால், அடித்ததோர்சலை வறுத்தன்னல் அடிக் கியே திரியெரித்துச் சாம்பலாக்கி, அடித்ததோர் சாம்பல் வேறுப்பு வேறுய் ரண்டையுந்தான் வீட்டின்மேல் தூவக்கேளு, குடித்ததோ கெண்மெணய்தனைக் கொப்பளித்தாற்போலக் கூட்டமெல்லாம் வெவ் வேறே பிரிந்துபோமே. 535

கூட்டமெனுநோயறவே கோடாசூரிக் குளிகைதனைச் சூட்டுகி
றேன் கூர்ந்துகேளு, ஈட்டமெனும் நாபிரசங்காந்தங்கெந்தி இயலான
வரிதாரஞ்செவ்வாலங்கொட்டை, நாட்டமெனுந்திப்பிலியாந் திரிபலையு
முள்ளி நலமாகவகையொன்று கழஞ்சியொன்று, காட்டமெனுஞ்
செம்புத்தூளீராருகுங் கழஞ்சப்பா அக்காரகாரமொன்றே 536

ஒன்றாகும் நவாச்சாரம் நீர்வள்ளிவிரைதா ளுரைநினையப்பனைக்
கிழங்கு ஆக்கக்கூட்டி, நன்றாகவொன்றாக் கரிப்பான்சாற்றில் நல
மானவிடாமலே கடிகையொன்று, அன்றாடமெட்டுநாளரைத்து நீயும
அப்பனையுளுந்துபோல் குளிகைகட்டி, குன்றாதும்வியாதிக்கு வுறுதி
கண்டு கொடுத்துவர ஆள்பலமுங் குறித்துப்பார்த்தே. 537

பார்த்து செய்பிலவதிகப் பாண்டுபோகப் பழச்சாற்றிலிரண்டுண்
டைபதமாயுண்டு, சேர்த்துசெய்செறியாமைக் குணத்துக்கென்றுசெப்
பரிய பசுவிநெய் கிராணியானால், சேர்த்துசெயச்சுக்குநீர் தன்னிலூட்
டுக் செகமானமோராகு முள்ளங்கிநீராகும், கார்த்துசெய் விரோசிக்
கயோரண்டெண்ணெய கட்டுமேலங் கழற்றுமவென்றால் வெல்லத்தூ
ட்டே. 538

ஊட்டுவாய் பழச்சாற்றில் விஷத்துக்கென்றால் உட்கொண்டு
மேலைக்குந்துவாலைபோடு, நாட்டவே நெல்லுமுளைச் சாற்றிலுண்ண
நாசமாம்வினையனைத்தும் நன்றாய்க்கேளு, பூட்டிடாநீர்ப் பிளவைமேல்
வெளுப்பு புகழான லேபனத்துக்கெல்லமேதான், நீட்டடா முத்தக்
காசிடித்தநீரில் நெஞ்சாணகிராணிக்கு நேரேகேளே. 539

நேரானவசீரணமுங்கிராணிசூலை நிலையாதகடுஞ்சூலைக்கெல்லாமப்
பா, வேரானமுருங்கைத்தோல் காற்றிலூட்டு மிதந்த செரியாமைக்
குத் தயிரிலூட்டு, வாரானசன்னிக்குமத்தஞ்சாறு மைந்தனே யுள்ளுக்
குமேலும்பூசி, சீரானமூச்சடைப்பு சுவாசகாசந் தீரவேவெள்ளாட்டுப்
பாலிலூட்டே. 540

ஊட்டுநீபிரமேக மூஷ்ணந்தீர வுறவாகநொச்சிச் சாறாட்டியூட்டு,
காட்டுநீ கண்புகைச்சல்போம் வென்றால் நலமானபழச்சாற்றில் நெற்றி
யிலேதேய்ப்பாய், நீட்டுவாயுடலெரிவு போகவென்றால் நெல்லிக்காய்ச்
சாற்றிலே நினைவாயூட்டு, கூட்டுநீதண்ணீரில் பித்தம்போகுங கூரான
கழுநீரிலுஷ்ணம்போமே. 541

போகுமடா வாய்வாதம் நடக்குவாதம் புகட்டுநீ சாதிக்காய்ப்
பொடியிலப்பா, ஆகுமடாவுடல்வீக்கஞ் சிறுநீர்த்தீரும் அப்பனேவி

ஷகடியுங் கடிவிஷமுமிக்க, வாகுமடாவஞ்சனைக்குச்சுக்குநீரில்வலிகடுப் புத்தீரவென்றால் வசம்புத்தூளில், ஏகுமடாவாதமறு முள்ளிச்சாற் றில் இயறானவனுபானங்கோடிதானே. 542

வாயுவுக்குத்தைலம்.

கோடியென்றவாய்வுக்குக தயிலஞ்சொல்வேன் கூர்ந்துகேள்புலத் தியனே குறக்குத்திட்டம், தேடிநீநல்லுவாய் வேரும்நொச்சி வெரு ளுஞ்சிற்றாமணக்குவேர் வகைக்குக்கேளு, கேடிலாப்பலமொன்றாயிடி த்துவாங்கிக் கிருபையுடன்சலம்பத்துப்படியும்விட்டு, நாடிநீ எட்டொ ன்றாய்க்குறுக்கிவாங்கி நாட்டுவாய் சிற்றாமணக்கெண்ணெய் படியுமொ ன்றே. 543

ஒன்றானகள்ளிப்பால் படிதானென்று வுத்தமனே வெள்ளுள் ளிப்பலமிரண்டு, நன்றாகிகோசலந்தானபடியுமொன்று நலமானதிரிபலை யும்பலமுமூன்று, குன்றாமலாட்டியந்த தயிலத்திட்டுக் குறுச்கிவந்த பதமறிந்து வடித்துக்கொண்டு, நின்றாருமீசனுக்குப் பூசைசெய்து நினைவோடேகாசெடைதா னுண்ணச்சொல்லே. 544

செந்தூர ஆனந்தவைரவன்.

உண்டவுடன்வாயுவென் றதனைத்துமோடு மொழியாதவாயுவெ ன்றால்கோடாசூரி, உண்டையிட்டு வுண்ணச்சொல்நீருந்தீரு முத்தம னேயானந்த வைரவனைகேளு, உண்டாகும் வியாதிகளிற் சுரங்கள் கூடில் உசிதமடாவிபரமுட னுற்றுக்கேளும், உண்டாகுமிதன்பேரு செந்தூரக்குளிகை யுற்பனத்தை யாருக்குமுரைக்கொணாதே. 545

உரையாதசூதமொரு பலமுந்தாக்கு உற்றதோர் செந்தூரப்பலமு மொன்று, நிறையாதகெந்தகமும் பலமுமொன்று நேரானயப்பிரேகம் பலமுமொன்று, கரையாதாரபியுமோ பலமுமொன்று காணப்பாபல மூன்று செவ்வாலங்கொட்டை, வரையாதயிவைசேர நாசவல்லிச்சாற் றில் மயனம்போலாட்டிநீ வழித்திடாயே. 546

வழித்ததோர் மருந்துக்கு விபரங்கேளு மைந்தனே வெற்றிலை யரைத்துவாங்கி, வழித்திடுவாய்விரற்கனற்றில் குகையுட் குள்ளே மறுபடியுமறுத்தந்தக் குகைக்குள்வைத்து, வழித்தரைத்த வெற்றிலை யுங் குகைமேற்பூசி வாகாகச்சீலைசெய்து மண்ணுஞ்செய்து, எடுத்து கெச்புடமொன்று போடுபோடு வளாருணன்போலிருக்கும் வரிசை கேளே. 547

கேளப்பா செந்தூரமெல்லாம் வாங்கிக் கிருபைபுரி செவ்வாலங் கொட்டையோடு, வாளப்பா காபியிவைபலமும்ரண்டு மாட்டுநீவெற்

றிலேச்சார்விட்டு நன்ருய், காளப்பா வொன்றறைத்து வழித்து நீயும் நற்குன்றிப் பிரமாணமுண்டைகட்டி, மீளப்பாசுக்கிந்து சித்திரமூலம் மீருமற் பொடிசெய்து வெருகடிதான் ருக்கே. 548

தூக்கியதோர் பொடியிலொருகுளிகைபிட்டுச் சுடுசலத்தில் சர்க்கரையில் தன்னிலூட்டு, தாக்கியதோர் நாள்மூன்றில் சுரமெல்லாந் தீருந் தடைபட்ட சுரசூலை கிராணிபாண்டு, தேக்கியதோரில்வகைக் குன் குன்மத்துக்குஞ் செலுத்திடிலனைத்தும்போம் பத்தியங்கேளு, ஆக்கியதோர் சோற்றுக்குப் பாலாமற்ருேன் ருகாதுபுளியுடலிலடுத்திடாதே. 549

இரசாயனவைரவன்.

அடுத்ததோ ரசானவைரவத்தைச் சொல்வேன் அப்பனே மச்சசெந்திராவறிந்துகொள்ளு, தொடுத்ததொரு நோய்க்கெல்லாஞ் சம்பிரதாயந் தொடுமுன்னே நோயெல்லாந் தூளாய்ப்போகும், கடுத்ததொரு சூதம்ரண்டு வசம்புரண்டு கழஞ்சப்பா சுக்கிரண்டுமிளகிரண்டு, எடுத்ததோ ரிக்திரண்டு வாளம்ரண்டு இயலான திரிபலையுங்கழஞ்சிரண்டே. 550

இரண்டாகு முருத்திராட்ச மிவைக்குநேரா யிட்டிடுவாய் வெள்ளுள்ளிப் பருப்புதானும், இரண்டாகும் பாண்டத்திலிட்டுக் கிண்டியீரமதற்குள்ளியிட தயிலங்கொண்டு, இரண்டாகுஞ் சாமமொன்று மத்திபின்பு யெருக்கன்பால் வார்த்துமொரு சாமத்தி, இரண்டாகுஞ் சாமமொன்று வெள்ளாட்டுப்பாலி லிட்டிளக்கிமத்திகெண்டை மீன்பித்துவாங்கே. 551

வாங்கியதோர் பித்துக்குள் சாமமொன்று மத்தித்து வாரியபின்னெடுத்துமைந்தா, பாங்கியதோர் குன்றிபிடை குளிகைகட்டிப் பதருமலந்தந்த வியாதிபார்த்து, தாங்கியதோர் கரிப்பானீருள்ளிநீரிற் கலந்தீரு மிஞ்சிச்சாறிவையிலூட்ட, தேங்கியதோர்முபல்மூர்ச்சை சிலேற்பனத்தின் திறமான மூர்ச்சையிவை யனைத்தும்போமே. 552

சிலைபாணம்.

போமப்பா தலைவலியுஞ் சன்னிமூர்ச்சை புகழான காலாதிவேதனையையா, ஆமப்பா மூக்குநீர்ப் பாய்ச்சல்தானும் அரோசிமுதற்பறந்தோடுமப்பாறகேளு, வேமப்பா சுரமெல்லா மொழிந்து நிற்கு மென்சிலை பாணமென்ற குளிகைசொல்வோம், நாமப்பா சிலையொன்று துத்தமொன்று நலமாகச் சுத்திசெய்து யெடுத்திடாயே. 553

எடுத்திடாமோர் சாய்ச்சித் தெளித்துக்கொண்டு இதமாகச்சாமமொன்று ஆட்டிபாங்கி, தொடுத்திடாய் மிளகிடைக்குக் குளிகைகட்

டிச் சுரங்களுக்குப் பசுவின்மோர்க் குள்ளேயூட்டு, விடுத்திடாச் சுர மெல்லாம் விட்டுப்போகும் மீறியதோர் சிலேற்பனத்தின் சுரத்துக் கெல்லாம், கொடுத்திடாய் சுரகாச குடோரிமாத்திரை கூறுவேன் மருந் துவகை கூறுவேனே. 554

சுரகாசத்துக்குத்தாளகக்குளிகை.

கூறுவேனரிதார மிரதஞ்சுக்கு கூர்மையுறும் வெண்காரந் திப்பி லிதானு, மீறிமே சம்பாகங் கரிப்பான்சாற்றில் வெண்ணெய்போல் சாம மொன்று ஆட்டிவாங்கி, ஊறுமே நொச்சிச்சாற் சாமமொன்று ஊறாட் டிப் பாவட்டங்காய்போற்கட்டி, தேறுமே யிஞ்சிநீர் தேனிற்சேர்த்து திடமாக வுண்டையொன்று கொடுத்திடாயே. 555

கொடுத்திடவே சுரகாசஞ்சுவாசகாசங் குத்திருமல் கெட்டிருமல் குறுகுறுப்பு, விடுத்திடவே சரம்பாய்ந்தாற்போலேயோடும வீறங்கச் சுத்தியுட மருந்துசொல்வேன், கொடுத்திடவே நாபிக்குக் கிரைச் சாற்றில் சூட்டுவாய்தினமொன்று பழச்சாற்கொண்டு, அடுத்திடவே நாளொன்று சிலேதான்சுற்றி யப்பனே தாளகத்தின் சுத்திகேளே. 556

தாளகத்தையரந்தோல் கியாழத்திலிட்டுத் தபவாக மறுதினத்தி லெடுத்துக்கொண்டு, மீளகத்திலுயிரெல்லாம் நோயைத்தள்ளிவிடாத சுரமனைத்துக்கும் விபரங்கேளு, தாளகத்தை வலுப்பிக்குங் கற்பராதி தாயத்திரி மாத்திரையின் கட்டுதானும், கிழகற்று கற்பூரமிரதமிகக் கிருபையுயர் சாதிக்காய் சமனாயாட்டே. 557

சுரத்துக்கு உண்டை

ஆட்டியதோர் தாளிடைக்கு வெட்டி வாளம் அப்பனே சேர்த் தணைக்கு மரிச்சாற்றால், தீட்டியதோர் சாமம் நீயரைத்துவாங்கிச் சிறுவுளுந்துப்பிரமாண முண்டைகட்டி, நாட்டியதோர் சர்க்கரையி லீயந்தாயானல் நலமான வெட்டுவகைச் சுரமும்போகும், நீட்டியதோ ருடலறிந்து கொடுத்தாயானல் நின்றுபோங் கடிகையொரு மூன்று மூன்றே. 558

வனதிகெசாங்குசரசம்.

மூன்றுநாழிகைக்குள்ளே சுரங்கள்நிற்கு முறையாகப் பத்யங்க ளிச்சாபத்தியம், மூன்றுநாழிகை வனதிகெசாங்குச ரசத்தையுரைக்கி றேன் ரசந்துத்தம் நாபிநாகம், தூன்றுநாள் மடைத்தாராம் வாளங் கெந்திசொர்னம் லோகமிரண்டுஞ் சமனாய்ச்சேர்த்து, தான்றுகாளுத்த மத்தாளிற் சாற்றில் கபவாக வேழுபிரகாரமாட்டே. 559

ஆட்டடா மத்தஞ்சாற் மணித்தக்காளி யடவாக முன்போலே யரைத்துயாற்றி, நீட்டியேபொரிகாரமாட்டிவாங்க நினைவாகக்குகைக்கு

தடவிப்பின்பு, ஊட்டியே யுண்டைதனைக் குரைக்குளிட்டு வுறவவேர்
வெண்கார மரைத்துமேலு, மூட்டியே தெரியாமலேழுசீலை முறை
யாகச்சுற்றிநீ மண்ணுஞ்சேரே 560

மண்செய்து பாண்டத்தில் நடுவேதானு மைந்தனே தமரிட்டு
வோடுபோட்டு, திண்செய்து அதன்மேலே மணலைக்கேளு திறமாக
நாலுவிரற் கடையுமிட்டு, பண்செய்தகுகைதனை மண்மேலவைத்துப்
பாங்காகமேலுமந்தப் பாண்டத்துள்ளே, தண்செய்தமணலதற்கு முக்
காலிட்டுத் தயவாகமேற்சட்டி கவிழ்த்துமூடே 561

மூடியேயெண்சாமங் கமலவன்னி மூட்டிநன்றாயாறியபின் கல்வ
த்திட்டு, நாட்டியே கணேசர்க்குப் பூசைசெய்து நலமாகத் தூளாக்கிச்
சிமிளில்வைத்து, நீட்டியே நோயறிந்து குன்றியிடையூட்டு நிலைத்து
நின்ற விருவகையாம் விஷங்கள்தீரும், வீட்டியேயனுபானம் வெற்றி
லையிற்பொதிந்து மென்றுதின்னச் சொல்லங்கே விபரங்காணே. 562

நீராமை கவுசி மகோதரத்துக்கு உண்டை.

காணப்பா சலக்கழிச்சல் குட்டரோணங் காயாத சுவாசமகோ
தரத்துக்கெல்லாம், பூணப்பா சீனியிலே யுண்ணச்சொல்லு புகழாக
வயிற்றுவலி வியாதிக்கேதான், ஊணப்பாகாட்டாமணக்கு நீரிலூட்டு
வுற்றவெள்ளைச் சாரணைநீர் சுரத்தைத்தள்ளும், தோணப்பா திரிகடுகு
பொடியிலிட்டு சுகஜன்னிமுவலான தெல்லாம்போமே. 563

போமப்பா யிஞ்சிச்சாற் றுள்ளேயுண்ணப் பொதுவான திரிதோ
ஷம்போகும்போகும், வேமப்பா சூலைக்குப் பெருங்காத்தூட்டு மே
லுமினியனுபானம் விணையமாக, தாமப்பா செய்திடவே பிணிகளெல்
லாம்போகுந் தயங்காமற்பத்தியமா யிருக்கச்சொல்லு, ஆமப்பா யஷ்
டகுன்மம் நீராமைகவுசி யப்பனே மகோதரமுந் தீரக்கேளே. 564

கேளப்பா மகோதரத்துக் குண்டைதன்னைக் கெட்டியாய்ச்சொல்
லுகிறே னிருப்புச்சல்லி, நாளப்பா செமபுதுத்தம் நாகமூன்றும் நல
மாக வெவ்வேறே சல்லியாக்கி, நீளப்பா வகையொன்று கழஞ்சியொ
ன்று நோாகயிந்துப்பு நிமிளைகெந்தி, வாளப்பா மனோசிலையுங் கெவுரி
தானு மாறுமலொவ்வொன்று கழஞ்சிதூக்கே 565

ாக்கியே பொடிசெய்து வைத்துக்கொண்டு சொல்லுகிறேனயத்
தகட்ட யெருக்கப்பாலில், தாக்குவாயாழாக்குக குள்ளேநீயுந்தய
வாகஆ றுதின மூறிப்பின்பு, ஆக்கியதோர் முன்தகட்டுப் பொடியுங்
கூட வமைத்ததற்குள் ளெருக்கம்பால் சிறுகவிட்டு, வீக்கியேபழச்
சாறும் அரைக்கால்விட்டு விரவியொருசாமத்தி லடைத்திடாயே. 566

அடைத்ததோர் மருந்ததனை ரவியில்வைத்து அன்றாட்டங் கிண்டி. வரத் தினந்தானேழு, புடைத்ததோ ரவிடட்டு வெந்துநீறிப் பொன் மெழுகுபோலிருக்கு மொன்பதாநாள், உடைத்ததோ ருண்டைக்காயைப்போலு முருட்டிநீ யுலரவைத்துக் குழலிலிட்டு, படைத்ததோர் வியாதிக்கு அனுபானங்கள் பகருவேன்மைந்தாகேள் கண்டிடாயே.

கண்டிடாய் வியாதிகண்டு அனுபானஞ்சேர்த்துக்காட்டினாற்றீருகிற வியாதிகேளு, மண்டிடாய் மகோதரமுஞ்சலக்கோவை யகிவைமதி யழிக்கு நீர்கமைவு கவுசிபாண்டு, வண்டாயவலிகுன்மந் தெறிகுன்மந் தானும் மகத்தான சத்திகுன்மம் வெப்புப்பார்வை, தெண்டிடாய் கடிகுன்மமேறுங்குன்மங் கிரிகுன்மம் விஷபாசஞ் சோமம்போமே. 568

சிலோதாரையுண்டை.

போமென்ற கிரிச்சினங்க ளாறும்போகப் பூட்டுகிறேன் சிலோதாரை யுண்டைதன்னை, வேமென்ற நாபிகெந்திசூதமிங்கு மென்கவுசி பெருங்காயஞ் சவாக்காரந்துருசு, ஆமென்ற நேர்வாளம் நஞ்சுபோக் கிவையெல்லாஞ்சமனாகத் தூளாயாட்டி, வேமென்றவோட்டாட்டால் பழச்சார்வார்த்து வெண்ணெய்போலாட்டி வாங்குவாங்கே. 569

வாங்கியதோர் மருந்தனை மிளகுபோல மணியாக்கிக் குழலிலே வைத்துக்கொண்டு, வாங்கிதோ ரனுபானம் வெல்லம்நெய்யாம் வளமானபழச்சாறும் சுருக்கிச் சொன்னேன், தேங்கியதோர் வியாதிகேள் தூலகாயந் திறம்பெரி வயிற்றுநோ யகவைநோயும், பாங்கியதோர் பெருவயிறு செண்டைகுன்மம் பறந்தூறும் நீர்க்கோவைதீரும்பாரே.

சுராங்கிஷம்.

பாரப்பா சுராங்கிஷத்தை யுரைக்கக்கேளு பண்பாகப் புறக்கருவும் அகக்கருவும்புறக்கி, பாரப்பா பன்னிரண்டு லட்சம்பாட்டில் படினே னைஞ்ஞூறு யெண்பத்தைஞ்சும், பாரப்பா நோயெல்லாம் மத்தியோடும் பண்டிதருக் கிந்நூல்பழையதங்கம், பாரப்பா நாலுதிக்கும் போகிசித்தர் பார்த்திருப்பார் பொருளாசை பாரார்காணே. 571

காணப்பா சூதமொன்று கெந்தியொன்று கருமத்தம்விரைமூன்று சுக்குநாலு, ஊணப்பா திப்பிலியும் நாலுதூக்கு வுரைக்கவதைதூளாயாட்டி யடைத்துக்கொண்டு, பூணப்பா குன்றியிடை பழச்சார் தன்னில் புகட்டினால் சுரம்போகும் விபாங்கேளு, தோணப்பா பழச்சாற்றிலிஞ்சிச்சாற்றில் துவளவரை வெவ்வேறேசாமம்ரண்டே. 572

ரெண்டாகுஞ்சாமமரை கடலைபோலே யென்மகனே யிடித்துலர்த்திவைத்துக்கொண்டு, ரெண்டாகுஞ் சுடுவெந்நீர் தன்னிலூட்டவெ

ண்சுரமுந்திரிசுரமுஞ் சன்னிபின்னு, மூண்டாகும்விஷசுரமுஞ் சன்னி தோஷந்தானுமூற்றமுறைதின் சுரமுமொழிந்துபோகும், அண்டாது சுரமெல்லா மெய்விட்டோ வறைகிறேன் துத்தரசத்தாண்மைபாரே.

துத்தரசம்.

ஆண்மையென்ற துத்தமொன்று துருகமொன்று அரிதாரந்தா னென்றசூதமொன்று, வாண்மையென்ற கெந்தியொன்ற சிலைதானெ ன்று மைந்தனேயிவை சேரத்தூளாயாட்டி, தாண்மையென்றசட்டிக்கு ளிட்டுப்பின்பு சாரணையிலைச்சாறுபடிகால் விட்டு, கேண்மையென்ற வெண்கலக்கிண்ணியாலே கெர்ச்சிக்கமூடியேசீலைசெய்யே. 974

சீலையதுமண்செய்து மண்ணுமிட்டு தீபாக்கினியாலேசாமமொ ன்று, சாலைசெய்தாரியபின் கல்வத்திட்டுத் தக்காளிச்சாறவகை யிரண் டுஞ்சேர்த்து, சேலைசெய்து மயனம்போல்வழித்து நீயுஞ் சிறுபயறுப் பிரமாணமுண்டைசேர்த்து, காலைசெய்ததனுபானம் பூரஞ்சூடன் கஸ் தூரிசிறக்கவதிற் கலந்துஆட்டே. 575

குளிர்காச்சலுக்குப் பாஷாணவுண்டை.

ஊட்டிநல்மாறல்போ முறைக்காச்சல்போகும் உத்தமனேதேனி லிடச் சுரமெல்லாம் போகும், ஆட்டினலண்டரண்டங் குலுக்கியாடும் அறுபத்துநான்கு சுரமனைத்துமோடும், காட்டினர் சீதசுரம் பறந்து வோடக் கட்டடாபாஷாண வுண்டைமார்க்கம், நாட்டினர் கெவுரியொ ன்றி வெள்ளையொன்று நலமாகச் சுண்ணாம்புக்குள்ளேவையே. 576

வைத்துநீபொதிக்க வளைவிளங்காய்போல வஸ்திரத்திற் பொதிக் துகத்திச்சுட்டு நன்றாய், மொய்த்துநீகரிபோக்கிப் பாஷாணமெல்லா மூறைமோடே யெடுத்துமைந்தா சூதமொன்று, வைத்துநீ முறியத னைமத்தஞ்சாற்றில் மைந்தனே சேரவகைசாமமொன்று, எய்த்துநீ பின்பதனில் வாளமொன்றி யியலானதிப்பிலிதானென்றுகூட்டே. 577

கூட்டியேமைபோலே யாட்டிக்கொண்டு கூருகிறேன் சிறுபயறு போலேகாட்டி, நாட்டியே யுலர்ந்தபின்பு குளிர்காய்ச்சல்தனக்கு நல மாக வொருவுண்டை வெந்நீரிலூட்டு, நீட்டியேமுலைப்பாலிலுண்டை யூட்ட நெறியில்லாச்சுரமெல்லாம் நெகிழ்தமாகும், பூட்டியே பத்தி யங்கேள் பாலுஞ்சோறும் பூர்த்திய யுண்டுவரப் பொறுக்குந்தானே.

பரங்கிச்சூலைக்கு மூலிகைப்பிரயோகம்.

தானென்றபறங்கிமுதற் சூலைபோகச் சாதகமாய் மூலிகையிற்சா ற்றக்கேளு, வேனென்றபேய்ப்புடோல் கொடிவேலிவேரும் வெள்ளா ட்டுப்பாலினாலாட்டி வாங்கி, தேனென்றசிறுமுள்ளிபோலுருட்டிதின

மூன்றிலாவின்பாலுண்ணைப்போகும், வானென்ற வெள்ளாட்டுப்பாலு மாடிமைந்தனேபாலுஞ்சோறுண்ணக்கேளே. 579

மண்டைசூலைக்கி.

கேளப்பா மருந்துண்ட மூன்றுநாளும் கெடியான சலத்திலேயிரு க்கச்சொல்லு, வாளப்பா புளியுப்பை மாற்றவேணும் வாங்காத சூலை க்கி வயணங்கேளு, தாளப்பா விவையொன்று சம்பிரதாயம் ச ங்கமா ய்ச் சொல்லுகிறேன் சமர்த்தாய்க்கேளு நாளப்பா யிரதமொ(ண்ணர்) தான்தூக்கி நலமான கெவுரியொரு பணந்தான்தூக்கி, நீளப்ப கடுக் காயுமெட்டுவாங்கு நேரானயொதிப்பட்டை கழஞ்சிபஞ்சே. 580

அஞ்சான வள்ளித்தோல் கழஞ்சிகால்தா னப்பனே யிவைசேரத் தூளாயாட்டி, தஞ்சான வெல்லமதில் நேராய்க்கூட்டிச் சாதகமாயுரலி லிட்டுந் நூளாயாட்டி, மிஞ்சாமல் நாழிகைதான் முப்பதானல் மேவி யெல்லாம்வாரியே கண்டைக்காய்போல், கஞ்சான குளிகைகட்டி நிழ லுலர்த்தி கரகத்தில் வைத்தங்கே மூடுமூடே. 581

மூடியதோர் குளிகையிலே யஞ்சுவாங்கி முறையாக மூன்றுநாள் பதனஞ்சூட்டு, நாடியதோர் புளியுப்பைத் தவிர்க்கச்சொல்லு நயமான வயிற்றிலே தக்கித்தானல், நீடினதோர் நெய்பாலும் வெல்லங்கூட்டி நேரான பருத்தியிலைச் சாறுங்கூட, ஊடனதோ ருள்ளுக்குக் கொடுக் கத்தீரு முற்றமண்டைச் சூலைக்கிங் குரைக்கிறேனே. 582

உரைக்கிறேன் துளசியிலே கரிப்பான்மேனியுயர் தாளியிலைக்காட் டுக் கொஞ்சிதானும், நிறைக்கிறேனிவையெல்லா நிழலுலர்த்தி நேரா கத் தூளாகவிடித்துப்பின்பு, துரைக்கிறேன் சூதமொன்று கழஞ்சிவா ங்கி சொல்லுகிறேன் வெற்றிலையால் முறித்துக்கொண்டு, உரைக்கி றேன் பொடியுடனே கூடச்சேர்த்து மைந்தனே பகல்முழுது மிடித் திடாயே. 583

இடித்ததொரு மருந்ததனை வடிதான்கட்டி யியல்பாகப் புதுக லசத்திட்டுக்கொண்டு, மடித்ததொரு பொடியிலே வெருகடிதான் தூக்கி வாகாசச் சலம்விட்டுக் குழைந்துருட்டி, பொடித்ததொருகுளி கை மூன்றுக வுண்ணப் போகுமப்பா தலைச்சூலை புண்கள்தானும், கடித்ததொரு பிணியதிகமாயிற்றென்றால் கலந்துண்ண வனுபானங் கட்டக்கேளே. 584

காட்டான பூசினிக்காய் கியாழமாதல் கடிவீழிச்சாறுதல பகவி லாதல், மட்டான வெல்லமிட்டுக் கொள்ளத்தீரும் மண்டைநோய் சூலைமுதற் கரப்பான்போகும், திட்டானசன்னிக்குக் கியாழம சொல் வோம் சிறுவழுதலையின் வேர்கழஞ்சிநாலு, தொட்டான சுக்கிரண்டு சீந்திரண்டு துவளவிடுத்திருநாழி நீரில்போடே. 585

சன்னிகியாழம்.

போட்டதனை பெட்டொன்றாய்க் குறுக்கிக்கொள்ளப் புகழான சன்னியெல்லாமுறிந்துபோகும், காட்டமுடனிருவனுக்குக் கியாழஞ் சொல்வோம் நலமான முத்தங்காயகழஞ்சுகாலு, நீட்டதனைப்பேய்ப் புடலுங்கழஞ்சுகாலு, போனபற்படகங்கழஞ்சிரண்டு, மூட்டதனைச் சிந்திரண்டு சுக்கிரண்டு முன்போலேயிருநாழிநீரிற்போடே. 586

நீரிலிட்டு எட்டொன்றாய்க் குறுவாங்கி நோகக்காசளவு நாக் குதாடி, நீரிலிட்டுக்கொண்டவுடன் பேதியாகும் நீரானயோருண்ணப் பேதிநிற்கும், நீரிலிட்டவாய்வுமுத லிருமல்போகும் நேரானவேர்க் கொம்புந் திப்பிலியுங்கூட, நீரிடக்கரிப்பாலுஞ் சமூலம் வாங்கிநே ரானசங்கம்வேர்தோடேவேரே. 587

தோடையுடன் தேள்கொடுக்கிசிறுதேக்கு தானும் செப்பமுட னிருநாழிநீரில் போட்டு, ஏடையுடனெட்டொன்றாய்க்குறுக்கிவாங்கியி டுபொடியுந்திப்பிலியுமூலமாட்டி, ஆடையுடன்கியாழத்தைக் கொண்ட போது அலத்திருமல்விட்டோடு மப்பாகேளு, சாடையுடன் சேர்த்த மேற் கியாழஞ்சொல்வேன் சாதகமாயிலவங்க மேலந்தானே. 588

தானென்றசெஞ்சந்தனம் பூலாவிருட்சம் சாதகமாய்ப் பூலாவேர் நீர்த்தாளிவித்து, மானென்றவிவையெல்லாஞ் சமன்தானாட்டி மைந் தனையாழாக்கு அளந்துக்கொண்டு, ஊனென்ற ஆவினெய்யுமாழாக்குங் கூட்டி யுறவுசெய்து சத்தெடுத்து உண்டபோது, தேனென்றகுழம் பெடுத்துநக்கினுக்கால் தீராதவிருமலெல்லாந் தீருந்தானே. 589

தீருமேகிரிச்சினங்களாறு மென்றால் செப்புகிறேன் கியாழத்தைத் திறமாய்க்கேளு, தாருமேகாணச்சாற் கொடுப்பைச்சாறு சாதகமாய் வெந்தசாறுகவாங்கி, தேருமே யிவைபிரண்டுஞ் சமனாய்க் கூட்டித்திற மாகக்கால்படி நீருண்ணச்சொல்லு, ஆருமேகல்தெரிக்கும் சலதாரை யாகும் தூர்த்திடாதசையடைப்புக்கியம்புவேனே. 590

தசையடைப்புக்கு.

இயப்புவேனிந்நீரில் காரஞ்சேர்க்க விசைவானதசை தெரிக்குமின் னங்கேளு, இயம்புவேன் கட்டிரத்த முயிந்துவீழு மிறங்குகின்ற நீர்த் தாரைக்கிடருந்திரு, மியம்புவேன் கியாழமொன்று சிறுதேக்கு மிளகு எரிசங்கம் வோசுக்கு கரிப்பான்பத்திரி, இயம்புவேன் தோடைவேர் கொம்மட்டிவேரு மிவையொன்றுக்கிருகழஞ்சி யிருநாழிநீரே. 591

நீர்தனையுழக்காக்கிக் குறுக்கிக்கொள்ள ரெத்தடைப்புச்சலவடை ப்பு நீரடைப்புத்தீரும், வாதனைக்கிரிச்சினங்களாறுந்திரு மற்றொருத்

தர்க்கிக்நூலை வழங்கிடாதே, போதனைச்செய்யாதே வாயாடாதே
பொய்சொல்லிப் புலையாடித்திரிந்திடாதே, சீதனையறியாரைச் சேர்ந்
திடாதே சிஷவர்க்கமறிந்துகொண்டு தீட்சைசொல்லு, போதனையறி
ந்தவாகடத்தைக்காட்டு பிதற்றினல்வாய்மேலே போடுபோடே. 592

போட்டவுடன் வணங்கினால் கருவைச்சொல்லு பொய்க்குறி
சொல் பண்டிதரைப்போலாகாது, நீட்டமுடன் துணிந்தவர்கள்போ
லவப்பா நெறிநிற்கப்பாவமில்லை யில்லாவிட்டால், நாட்டமுடன் பல
பழிகள்சுமதியாகும் நலமறிந்து சொல்வதற்குத் தோஷமில்லை, கூட்
டவுடனென்றான பெண்ணைப்போலே கூடுமப்பா சிஷவர்க்கங்கூடுந்
தானே. 593

இரசகுலைக்கு.

கூடிநின்ற சரீரத்தில்ரசகுலை முறிக்கக் கூடுகிறசுரைக்குடுக்கை சக
ரியைவாங்கி, நீடிநின்றபழமோரில் கரைத்துக்கொள்ள நீங்காதாக்கிக
மூன்றுநீராய்ப்போகும், நாடிநின்ற ரத்தபித்தம்போக வென்றால் நற்கு
ன்றிவெட்பூலாமருக்காரைவேரும், ஓடிநின்ற மொசுமொசுக்கை சிறு
கிளாவேறு முப்பிலிவேருடன் திருநாப்பாலைவேரே. 594

சுராங்குசம்.

பாலையுடன்மிளகுகடு கொண்றாய்க்கூட்டிப் பரிவாகவாட்டு நெய்
யிலெ ...ணெய்விட்டு, ஆலையுடனடுப்பேற்றி பெரித்துவாங்கு அப்ப
னோரத்தபித்த மனைத்தும்போகு, மாலையுடன்சுராங்குசத்தைச் சொல்
லக்கேளு வளர்சூதம் விழிகஞ்சாவசுவாசிநோய், சோலையுடன் தூத
ளையின்சாற்றாலாட்டித் துவரைபோல்குளிகைகட்டி வைத்திடாயே.

வைத்ததொருகுளிகை யொன்று யிஞ்சிச்சாற்றில் மைந்தனேகு
ளிர்மாறல் வெண்சுரம்போம், வைத்ததொரு கிரிச்சனத்துக்கின்னஞ்
சொல்வேன் மண்ணில்வளர்பூநாக மெலுமிச்சங்காயளவு, வைத்ததொ
ருபாலிலே கரைத்துக்கொள்ள மகத்தான கல்லடைப்புத்தெறித்துப்
போகும், வைத்ததொருமுசுட்டையிலை பாக்களவரைத்து மருவிய
தோரெண்ணெயிலே கொடுத்திடாயே. 596

கிரிச்சனக்கட்கு.

கொடுத்திடவே நீரடைப்புத் தீருங்கண்டாய் கூறுகிறேன் கொள்
ளுஞ்சார்வாய்கிக்கொண்டு, கொடுத்திடவே யரிசியிட்டுக்கஞ்சி காய்ச்
சிக் கொடுத்தவுடன் நீர்சிறுப்புக்குணமாய்க்காணும், கொடுத்திடவே
மாவிலிங்கவடவேரொன்று கூறானநெரிஞ்சிவேர் பேராமுட்டி வேரும்,
கொடுத்திடவேசி றுபூளைவேருங்கூட கூட்டியொன்றாய் நீரிலிட்டெட்
டொன்றாக்காச்சே. 597

காய்ச்சிவடித்துண்டிடவே பாறைமுதல் நழுவும் கல்தெறிப்புநீர்க்
கடுப்புக்கரையாவென்றால், காய்ச்சிவடித்திருந்த பழங்கஞ்சிக் குள்ளே
கடு நெல்லி முள்ளியொரு பலந்தானிட்டுக், காய்ச்சு கறந்தாலைழயி

ட்விழுதுச்சாறும் கலந்தரைத்து பெட்டுநாளுநெண் ணக்கேளு, காய்ச்சு லறுநீர்க் கடுப்புமடைப்புநீரும் கடும்புழுத பணமிடைதான் தூக்கு தூக்கே. 598

தூக்கியிள வெந்நீரில் போட்டுக்கொள்ளத் துளிவிழுதல் பொசித் தூறல்துறந்து போகும், தாக்கியே யிருமலமுமடைந்ததாலுற் சாற்று கிறேனிருமலத்தின் தாரைதன்னை, தேக்கியே திருக்கள்ளிப்பா லாழா க்கு சிற்றுமணக்கெண்ணை யாழாக்கப்பா, தேக்கியே ஆவினெய்தான் படியாழாக்கு சோராயல் பாண்டத்திலூற்று வூற்றே. 599

ஊற்றியே நிலைப்பனேவேர் வெள்ளையுள்ளி யுத்தமனே பெருங் காய மஞ்சளோடு, சேத்திடியே யொவ்வொன்று அரைப்பலமாயாட்டி லேகித்துப் பதமாகவடித்து நீயும், மாற்றியோரண்டு காசிடைதானக்க வப்பனேமலதாரை திறக்கும் பின்னும், போற்றியே பால்கஞ்சிகொள்ள வேணும் பொழுதுபுகில் பருப்பிட்டுக் கஞ்சிவையே. 600

நீரடைப்புக்கு.

கஞ்சிகொள்ள நீரடைப்பு வெளியாப்போகும் காட்டாதே யிந் நூலைக் கள்ளர்கையில், அஞ்சியே நடப்பவர்போல் கிரகிக்குமட்டு தொழுவார் நூல்கிட்டி லகந்தைசெய்வார், மிஞ்சியே யெருநாகி லுடை யோரப்பாவெறும் விரைவாக்கொன்றும் விள்ளவேண்டாம், பஞ்சியே போவென்று தள்ளிவிட்டுப் பாரப்பா பரபரத்தைப் பற்றிப் பாரே. 601

நீர்ச்சுரப்புக்கு.

பாரப்பா விப்படியே கஞ்சிகொண்டு பத்திரமாய் மறுநாளைக் கன்னமுன்னில், நேரப்பா நீரோடு மின்னமொன்று நிகழ்த்துவே நீருள்ளி யிக்துவோடு, தாரப்பா பழம்புளியும் சமனுப்கூட்டிச்சாதக மாயறுதிங்கள் சென்றநாடி, வாறப்பா கலக்கி நீயுண்ணச்சொல்லு மரு வியதோர் பத்தியத்தை வழங்குவேனே. 602

வழங்கியதோர் பச்சரிச்சி பயறுஞ்சமனுப் மைந்தனே பால்கஞ்சி குடிக்கச்சொல்லு, விளங்கியதோர் வெண்சாவல் குடலீரலடைத்து வெண்பசுவின் பாலிலே கொள்ளப்போகும், புழங்கியதோர் வாய் பேசா துண்மைவேணும் பூட்டக்கேள் நறுந்தாளிச்சாறுவாங்கி, அழு கியதோர் குறுவை நெல்லரிசிகூட்டி யாட்டியே வெல்லமொடு ஆட்டு நெய்யே. 603

கடலடைப்புக்கு.

நெய்விட்டுக் கிளறியே தின்னும்போது நேராகக் கல்லடைப்பு விக்கநீங்கும், நெய்விட்டுப் பலகரையின் சாம்பல்வாங்கி நிம்பச்சார் குழப்பியுண்ணில் நீர்தாரையாகும், :நெய்விட்டு ஆவின்பால் சங்கங் குப்பி நேராகவுண்டிடவே சிறுபறுப்புவாங்கும், நெய்விட்டு ஆட்டுத் தாம் பொட்டிதன்னை நேரான தண்டிலே பொதியப்போடே. 604

## வல்லாரைச்சூரணம்.

போட்டங்கே குழுத்தளவுசலத்தில் றிக்கப் போகாத கல்லடைப்பு புழுக்கிவீழும், நீட்டக்கேள் புனல்முருங்கை நன்னாரிவேரும் கோரான ஆவரைவேரமுக்குறாவேர், நாட்டக்கேளுத்த மதாளிவேரும் நலமாக வாட்டியே விளக்கெண்ணைருத்தி, பூட்டக்கேள் குழப்பிநக்க வீக்கந் தாக்கம் பொருமலொடு கல்லடைப்பு புகழ்ந்துபோமே. 605

போமப்பா ஜாவாலி மனேசிலையும் நோய்ப் புகழ்மேனிச்சாற்றி லுண்ணப்பொழியுநீர் தான், வாமப்பாசின்னிச்சார் நாவல்பட்டை வளமாக வதின்கொட்டைப் பருப்புங்கூட, வேமப்பா சமபாக மரைத்து வாங்கி வெள்ளாட்டின்பாலிலே யுண்ணப்போகும், ஆமப்பா வல்லாரைச் சூரணங்கேளு அப்பனே மேகமென்ற தனைத்தும்போமே. 606

அனைத்தும்போம் வல்லாரைச்சமூலம் வாங்கி அப்பனே நிழலுலர்த்திச் சூரணித்து, அனைத்தும்போம் நெய்யிலுண்ண மேகமெல்லா மாச்சரியம் திலக்குமிழ் வேரிடத்துநின்றாய், அனைத்தும்போம் நீரிலிட்டெட் டொன்றாய்க்கொள்ள அடைத்திருந்த பல்லுவிழு மப்பா கேளு, அனைத்தும்போம் காய்ப்பாகல் நத்தைச்சூரி யடைவுகருஞ்சீரகமுஞ் சலத்திற்கூட்டே. 607

கூட்டியே யெட்டொன்றாய்க் கொள்ளக்கேளு கூட்டோடே கல்தெறித்துக் குமுறிவீழும், நாட்டியே மூன்றுதின முண்ணத்தீரும் நலமான கொடுப்பைச்சார் கொச்சிசாறு, மூட்டியே வகைக்குழக்குக் கலந்துகொள்ள உடன்தீருங் கல்லடைப்பு சதையடைப்பு, நீட்டியே பிரமேக மிரண்டுபத்துபோக நிகழ்த்துகிறேன் மகாமேக குடோரி தானே. 608

## மகாமேகக்குடோரி.

தானென்றசாரீய மிலுப்பைசெய்யில் தனித்தனி யேழுதாமுருக்கிச்சாய்க்கத், தானென்ற கண்டங்கத்திரியின் சாற்றில் சாதகமாயெடுத்ததனைச் சட்டியிலிட்டுத், தானென்ற நாயுருவி சிவக்கதாக சட்டிக்குளிட்டு நீவறுக்கும்போது, தானென்ற காண்டிகொண்டு கிண்டிகிண்டி சர்சமாய்ச் செந்தூரமானபின்பு, தானென்ற செந்தூரங் குழலிலிட்டு சாப்பிட்டால் மேகநதி குடோரிதானே. 609

குடோரியென்ற செந்தூரபற்பந்தன்னைக் கூறக்கேள் பணமூன்று நெயில்கொள்ள, குடோரியென்ற சக்கிலத்தில் மேகம்போகும் கூறுன தேனிலிடச் சலமேகம்போம், குடோரியென்ற கீழ்க்காயில் சாற்றிலூட்ட கொத்தோடே சுரோணிதமேகந்தீரும், குடோரியென்றரத்த மேகத்தைப்போக்கும் குறுவாழைத்தண்டு நீர்தன்னிலூட்டே. 610

ஊட்டடா சிறுபூளைச்சாற்றில் நீயுமுத்தமனேகல்லெரிப்புக்தீருந் தீரும், நாட்டடா விஞ்சிச்சாற் சீதசுரம் போகும் நலமானமேனிச்சாற் றன்னிலூட்ட, வாட்டடாவறுசன்னி வாதம்போகு மைந்தனே வெற் றிலைச்சாற்கிராம்பு கூட்டி, நீட்டடா பித்தசுரம் வெருவியோடும் சேரு ற்றதாபசுரந்தனக்குக்கேளே. 611

கேளப்பா இளநீரைச் செதுக்கிவந்து கொடியாகநீரிலிடபித்தசுரம் போகும், வாளப்பா முச்சாற்றிலூட்டவூட்ட வாகாக நீரிழிவுபோகவெ ன்றால், வேளப்பாவயினியொடு விளாம்பிசினும் சேராய் விரவுவாய் தேனிலே பொடிதான்ரண்டு, நாளப்பாவேழுதின முண்ணத்தீரும் நல மானகிரிச்சினங்கள் போகத்தானே. 612

கிரிச்சினங்கள்போகவென்றால் மூசுட்டைவித்து கெடியாக நெரு ஞ்சிவித்தா வாரைவித்து, கிரிச்சினங்கள்போகவே வகைக்குழக்குக்கெ டியாக விளாம்பிசினும் கழஞ்சியெட்டு, கிரிச்சினங்கள் போகவேயபினி நாலு கேளப்பா யுலர்த்திநன்றாய்த் தூளாயாட்டி, கிரிச்சினங்கள்போ கவே வெருகடிதான்தேனில் கெடியாகச் செந்தூரம் பொன்பிடிதான் போடே. 613

நீரிழிவுக்கெண்ணெய்.

போட்டிடுவாயட்டதினம் நீரிழிவுதீரும்புகழான நீரிழிவுக்கெண் ணெய்கேளு, நாட்டிடுவாய் சூதமொரு கழஞ்சிபத்து நலமானகெந்தக முவகழஞ்சிபத்து, ஆட்டிடுவாய் வெற்றிலையை யிதம்கிரட்டி யப்பனே பேழைபோற குகைதான்கட்டி, நீட்டிடுவாய் குகைக்குள்ளே கெந்தி சூதம் நேராகவைத்துநீ மூடுமூடே. 614

மூட்டியே குகைகட்டி வெற்றிலையையிட்டு முழங்கவேயிருநூறு பாத்திகட்டி, நாட்டியேபொதிந்து கட்டியதின்மேல்கேளு நலமான வாழையிலை யிருநூறுபொதிந்து, நீட்டியே பிளவைகட்டு சுத்திவைத்து நெருக்கிரார்கட்டி யொருகுழி கெல்லிநீயும், ஊட்டியே குழிக்குள்ளே புளிப்புறோணி யுத்தமனே யிரஞ்சுமாக்கால்கொட்டே. 615

கொட்டியேயதின்மேலேயிலைபொதியவைத்து குவித்திடாயதின் மேலேசிராப்புறோணி, கொட்டியேயனலிட்டு வெந்துநிற்கும் குவியநீ தெரியாமல்மண்ணைமூடி, கொட்டியே மூன்றுதினங்கழிந்தபின்பு கூட் டடாமருந்தெடுத்துக் கல்வத்திட்டு, கொட்டியே தூளாக்கிகுழலிட்டு கூறக்கேள் செந்தூரங்குணத்தைக்கேளே. 616

குணங்கேளுமதுமேகம் பித்தமேகம் கூறுனவாயுவுடன் கொடிய மகம், சினங்கேளுவுண்டவுட னிறந்துபோகும் செய்யவுறகிரிச்சினந் தான்பிரக்கேளு, மணங்கேளுமத்திக்தோ வாவாரந்தோலு மைந்தனே வொதியமரம்பட்டைதானும், கணங்கேளுசமமாக முலர்த்திநீயும் தரி தரிக்கநன்றாய் பொடியாக்கித்தேனிற்கொள்ளே. 617

### நீரிறங்க.

கொள்ளக்கேள் கிரிச்சினங்கள் போகும்போகு கூனமன்றிநீரிறங் கேளுகேளு, விள்ளக்கேள்மாம்பட்டை யாவரையின்பட்டை வெள் வேல்தோல்வேப்பந்தோ லிலைவதானேராய், அள்ளக்கேளிடித்துவொ ருபாண்டத்திட்டு அப்பனேசலம்விட்டு ஊறவைத்து, அள்ளக்கேள் குறக்கினமுழக்கருந்ததுயர்தீரு மேகாதிசூரணத்தைப்பாரே. 618

### மேகாதிசூரணம்.

பாரப்பா மூங்கிரிகைபேரீச்சம்பழமும் பருநெல்லியதிமதுர மேல ங்கல்நார், நேரப்பா திப்பிலியுஞ்சிறுபூளைவேரும்நேரானசந்தனமுங்கொ த்தமல்லி, வேரப்பாவெள்ளரியின் வித்துங்கூட்ட மீறுமல் சமபாகஞ் ட்னியத்து, வாரப்பா வெருகடிதான் கழுநீரிற்கொள்ள மைந்தனே கடுப்பெரிவுகிரிச் சினங்கள்தீரும், ஆரப்பாவறிந்துசெய்வோர் சித்தர் முத்த ரப்பனேமற்றோர்க்குத் தெரிந்திடாதே. 619

### வங்கபற்பம்.

தெரிந்திடவேகுன்மங்கள் சிதறிவோடச் செப்புவேன் வங்கபற் பந்திறமாய்க்கேளு, அரிந்திடாய்த்தகடுகொண்டு வங்கந்தன்னை யப்ப னேசட்டியொன்றி லரைவாசியுப்பை, சொரிந்திடா யதன்மேலேதகடு வைத்துச் சேரவந்தச்சட்டிரம்பவுப்பமிட்டு, வருந்திடாமேல்சட்டிக விழ்த்துமூடி மைந்தனே நாற்சாமமெரித்திடநயே. 620

எறிந்தாறியெடுத்துப்பார்வங்கபற்பமென்மகனே ரண்டுபணந்தன் னைவாங்கி, யெரிந்தாறுச்சர்க்கரையில் குழப்பியுண்ணஎட்டுவகைகுன்ம ங்களெல்லாம்தீரு, மெரிந்தாறுநோய்க்கொல்லாமிப்படியேயிட்டு இட்டு வரவங்கபற்பமினங்கேளு, எரிந்தாறுநோயனைத்துமூசிதமிந்த வியல்பு கேளதில்கண்ணிபிடுங்கிடாயே. 621

பிடுங்கியொரு சட்டியிலேகழுவிக்கொண்டு பேராகத்தாழிக்குள் பாதியிட்டு, நெடுங்கியேயிரண்டுபலம் வங்கம்வைத்து நேராகவதின் மேலுமதில்கண்ணியிட்டு, நடுங்கியேதோர்சட்டியினூற் கவிழ்த்துமூடி ராப்பகலாயெண்சாமமூத்தியிட்டு, மடுங்கியேயாறவிட் டெடுத்துப் பாரு மைந்தனேவங்கமதுபற்பமாமே. 622

ஆமப்பாபற்பத்தில் பணந்தானென்று ஆவினெய்யிற் கொண்டிட வேதீருநோய்கே, ளாமப்பா வெலும்புருக்கி வெள்ளைவீழ்த லுடல் காந்தல்கடுப்பு கிரிச்சினங்கள்தீரும், வேமப்பாசலக்கழிச்சல் காமாலை பாண்டு வெருகனலில்பஞ்சுபோல் வேகும்வேகும், நாமப்பாமருந்தெல் லாமுள்ளபடி சொன்னோம் நாதாக்களிக்கருவை மறைத்திட்டாரே.

## அப்பிரகசெந்தூரம்.

மறைபோற்று மப்பிரக செந்தூரத்தை வயணமாய்ச் சொல்லு கிறேன் மச்சசெந்தீரா, நிறைபோற்று மப்பிரகமிடித்துவாங்கி நேரப்பா பாண்டத்திலிட்டு நீயும், கரைபோலுங் கலசத்திலரசு அத்தி நலமான ஆலம்பட்டை யிவைகள் நேராய், குறைபோக்கி யிடித்து நீலசமும்விட் டுக் கும்மட்டியே கழுவியதை யூறவையே. 624

ஊரியதோர் நீர்பிழிந்து அப்பிரகமாட்டி யுத்தமனே யெருக்கிலை யைப் பாத்திரன்றாய், மீறியதோரடைவைத்து வுலர்ந்தபின்பு வீதியிலே யெருக்கவித்து அடையைவைத்து, யாறியதோரடைமேலே யெருவுங் மைந்தனே வறகாலிப் புடத்தைப்போடு, தேறியதோரப்படியேயிருபத் தொன்று தரத்திலேயப் பிரகஞ்செந்தூரமாமே. 625

செந்தூரமெடுத்துநீ ஜலத்திற்போட சீக்கிரத்தில் தளர்ந்துபோ மிதந்திடாது, செந்தூரம் பணவிடைதான் தேனில்கொள்ள தீராத நீரி ழிவு தீருந்தீரும், செந்தூரமுண்டிடவே கிரிச்சினங்கள் செப்பரிய க்ஷயந்தீருங் குன்மந்தீரும், செந்தூரமுண்டிட நோயெல்லாந்தீரும் சிவ சிவாவப்பிரகந் தெளிந்தபேர்க்கே. 626

## பிரமேகத்துக்கு

போக்கான பிரமேகமொழியக்கேளு பூட்டுவேனீருள்ளி பழச்சார் வெல்லம், தாக்கான சமபாகம் பனியில்வைத்து தான்பிழிந்து சாப் பிடவே தணிந்துபோகும், தேக்கானவப்பிரக மின்னஞ்சொல்வேன் திருமாலினப் பிரமேகமெடுத்துவந்து, வாக்கான வெள்ளாட்டுநீரில் வெந்து மைந்தனே மறுபடியுமாட்டக்கேளே. 627

மாட்டக்கேள் சுண்ணும்புதண்ணீருக்குள்ளே வாகரணகோனீரில் வித்துக்கொண்டு, நாட்டக்கேள் கலசம்விட்டுக் கழுவிப்போட்டு நன் றாக விதழிதழாயெடுத்துக்கொண்டு, பூட்டப்பா பதுசிலைக்குள்ளே வைத்து புகழாகப் பருநெல்லுங் கூட்டக்கூட்டி, மூட்டைக்கேள் கிழி கட்டி சட்டிவிட்டு முத்துப்போல் தெளிக்காட்டி மட்டாய்வாரே.

வார்த்துநன்றாய் விசைந்திடப் பிரகம்கரைத்து மண்டிபோல் கீழ் நிற்குந் தெளிந்திறுத்து, வார்த்து நன்றாயுலர்ந்தபின்பு ஆலம்மாலும் வளராலம் விழுதுமதின்மிகிழுங்கூட, வார்த்து நன்றாய் மயனம்போ லாட்டிவாங்கி மைந்தனே யின்னமுங்கேள் நினைவாய்நீதான், வார்த்து நன்றாயாவிலையில் பழுப்புவாங்கி மடக்கொன்றில் மருந்தப்பி மடக்கால் மூடே. 629

மூடியே சீலைசெய்து மண்ணுஞ்செய்து மூசியாதே கஜபுடத்திற் போட்டுவாங்கு, நாடியே மூன்றுதரமிரட்டையிலேபோட்டு நயமாகவாறு

## மதுராதிதயிலம்.

சாற்றக்கேள் மதுராதி தயிலமொன்று தபோதனர்களாராய்ந்து சாபந்தீர்த்துச், சாற்றக்கேள்சிறுகீரை பொன்னாங்காணி தவிராவரை யிலையுந்தாமரையின்யிலையுஞ், சாற்றக்கேள் மடத்தாழை விழுதுங்கூட சமபாகமிடித்ததனை பதக்குநீரில், சாற்றக்கேள் நாலொன்றாய்க்குறுக்கி வாங்கி தயிர்போலப் பிழிந்துவைத்துபின்னு ங்கேளே. 644

கேளப்பா வெட்டிவேர்பலமஞ்சாகும் கொடியாகுமிலாமிச்சம்பல மஞ்சாகும், காளப்பாசந்தனமும்பலமுமஞ்சாம் நலமானரெண்டு பலம் செங்கழுநீர்மூலம், தாளப்பாவிவை நயெல்லாஞ் செவ்விளநீர்விட்டுச்சா தகமாமயணம்போலாட்டிவாங்கி, நீளப்பா மூக்குறுணி சலத்திற்சேர்த் துநெருப்பெரித்துயெட்டொன்றாய்க்குறுக்கிவாங்கே. 645

வாங்கியேமூந்திவைத்த கியாழத்தாட்டி மைந்தனே மேல்மருந் தைமாட்டக்கேளு, பாங்கியேயிலவங்கமே லங்கோட்டம் பருமதாரம் செண்பகப்பூசாதிபத்திரி, தாங்கியேமஞ்சிட்டிகாசகல்லுர் சாதிக்காச டாமாஞ்சுகிராய்புசீர, மோங்கியேமாஞ்சிகையுங்கூகைமீரு முந்தமனே வகையொன்று கழஞ்சியொன்றே. 6 6

ஒன்றாக மருந்தெல்லாமாட்டிவாங்கியுருகனே மூன்வைத்தகியாழ த்தாட்டி, நன்றாகநல்லெண்ணெய்படியும் விட்டு விநாயகற்குப்பூசை செய்துவடித்துப்பின்பு, குன்றாதுகைகற்பூரம்புழுகுசட்டம் கோரோசனை யிரண்டுபணவிடைதான்சேர்த்து, பொன்றாதுந்தயிலமிட்டு சீயக்காய் தேய்த்துப் புகழாகமுழுகிவாப்புதுமைகேளே. 647

புதுமையென்ற மேகங்களிரண்டுபத்தும் பொறிவிழுந்தகருமருந் துபோலவேகும், புதுமையென்றவுருவம்போல் வாகடங்கள்பண்டிதர் களறியாமல் பழியைக்கொண்டார், கதுமையென்றதொழிலெல்லாஞ்சூ த்திரத்தில் சொன்னேன் கண்கெட்டகுருடருக்குங்காணலாகும், கொ துமையெனக் நாகபூபதியைக்கேளு கோடானுகோடிபிணி தீருந்தானே.

## நாகபூபதி

தானென்றதாம்பிரபலந்தான் ரெண்டு தகடுவெகுலேசாகத்தட்டி வாங்கி, தானென்றபிளியிலைச்சாற்றுக்குள்போட்டு சாதகமாய்கொதிப் பித்துயெடுத்துக்கொண்டு, தானென்ற கெந்திரண்டுபலந்தான் வாங்கி சாதகமாயெருக்கம்பால்விட்டு ஆட்டு, தானென்றதகட்டிலிருபுறமும்பூ சிதாளவெயிலுலர்த்தியே திரும்பவாங்கே 649

வாங்கியே தகடுதன்னை சிறுசட்டிக்குள் மாட்டியொருமேல்சட்டி கொண்டுமூடி தாங்கியந்தசட்டிக்குள் சீலைசெய்து சாதகமாய்மண்

செய்துயிருசாமமட்டும், தேங்கியந்த வெருவடுக்கிச் சட்டிவைத்து திரும்பவொரு முழவுபாவெருவடுக்கி, பாக்கியந்தவனவூட்டி யெரித்து ஆறில் மார்மசினை செந்தூரம்பற்பமாமே. 650

பற்பமெத்த தாம்பிரத்தை தளாயாட்டி பாச்சடாசமாகம் சூதங் கெந்தி, அற்பமென்று நினையாதே செருப்படிசாறுவிட்டு ஆட்டியே குகையிலிட்டு மண்ணூஞ்செய்து, சிற்பமென்று முன்போலப் புடத் தைப்போடு சிவசிவா பாறவிட் டெடுத்துப்பின்பு, சொற்பமென்றே ரெட்டிலொன்று நாவிகூட்டி சேராமல் நாவிபொன்று மிளகுகூட்டே.

மிளகிட்டுக் கொடிவேலி மூலம்வாங்கி முலாவேகியாழத்திலாட்டு ஆட்டு, இலகிட்டு யிருளாமக்கழித்தபின்பு யிதமாகக்குன்றிபிடை குளி கைகட்டி, மிளகிட்டுகுகையிட்டு நெலுக்குள்வைத்து வொருதிக்கள் சென்றபின் வாங்கிமைந்தா, புளகிட்டநோய்க்கெல்லா மனுபானந்தன் னைப் பாடுகிறோம் பண்டிதரே பார்த்திடீரே. 652

பார்த்திடவே திப்பிலிந்தூள் பணந்தானென்று பாச்சடா பூபதி யாமுண்மையென்று, சேர்த்திடவே பதின்மூன்று சன்னிபோகும் சேர்தற்குயிஞ்சிச்சார் திறமாயும், கார்த்திடவே கொடிவேலி கியாழத் தாட்டு கரிஞ்சுறுங்குப் பதினெட்டு சூலைபோகும், வேர்த்திடவேதிரி கடுகுதன்னிலூட்டு கொடுத்தவுடன் காமாலை தானுங் கூசிப்போமே.

கூசிப்போமஷ்ட குன்மந்தேனிலூட்டு குலாவியதோர் சயரோகங் கூப்பிட்டோடும், பேசிப்போம் பவுத்திரமும் காப்பான்புண்ணும் பிரள வருங்குத்துமுதல் கிலக்கெட்டோடு, மாசிபபோ மூண்டுநின்ற வியாதி யெல்லா மடியுடனே பேர்ந்துபோமப்பாகேளு, வாசிப்போமென்று நினைவாயிற்றென்றால் மைந்தனே யிந்தநூல் வாசிப்பாயே. 654

கெந்தகத்தைலம்.

வாசிக்குங்கெந்தகத்தின் தயிலம்வாங்க வகைகேளு புலத்தியனே மச்சகேந்திரா, நேசிக்குங் கெந்தியொரு பலந்தான்மூன்று திருயிகற்ப சூதமஞ்சலிங்கமூன்று ஆசிக்குங்கெவுரிமூன் றதுக்கு அரிதாரமொரு மூன்று சிலைதான் மூன்று, பூசிக்குமாயிமுதல் திருவாணிக்கும் புகழாக வாமத்திற் பூசிப்பாயே. 655

பூசித்துமஞ்சளிலே தயிலம்வாங்கி புகட்டிநீ மருந்தெல்லாமயனம் போலே, பூசிட்டு பெட்டுநாளாட்டிவாங்கி புகழான பாணியிலேயாட்டு மைந்தா, பூசித்துப்பாணிக்குள் வளப்பக்கல்லால் பொருந்த நீயுடைத் தங்கேசந்துவாய்க்கு, பூசித்துக்கற் சுண்ணாசோறுங்கூட பொங்கி நின்றவுமிக்கரியுமாட்டி வாங்கே. 656

வாங்கியதோர் மருந்ததனைச் சிலையிலூட்டு வாகாகச்சந்துவாய டைத்துச்சுற்றி, வாங்கியதோர் மண்செய்து கச்சமட்டும் வாகாகக்குழி வெட்டிப்பாதிபட்டும், வாங்கியதோராட்டுருவை யதிலே கொட்டி மணல்கொட்டி நெற்குழிபோல் வளைந்துபின்னும், வாங்கியதோர் பாணிதனையதன்மேல் வைத்து மைந்தனே யாறுதிங்களாட்டியங்கே. 657

ஆறுதிங்களானபின்பு திறந்துபார்க்க வப்பனே நீலநிறத்தயிலமாகும், வேறுவினையொன்றுமில்லை தயிலங்கொள்ள வேதாந்தத்தாயெனக்கு விரித்துச்சொன்னாள், மாறுவிதமணல்பட்டத் தயிலமாச்சுமகத்தான தயிலமது மரணமில்லை, பேறுவிதம் வியாதிகடகு வனுபானந்தானென்மகனே மஞ்சள்சாறிடித்திடாயே 858

மஞ்சள் சாறதிலூட்டு மகோதரங்கள்தீரும் வளர்நிம்பச்சாற்றிலிடக்குலைநோவுதீரும், மிஞ்சாமல் வெருகம்வேர் தயிலம்வாங்கி வேதித்துக்கொடுத்திடவே குஷ்டந்தீரும், அஞ்சாமல் சீனிமேல கொள்ளக்கொள்ள அப்பனே யாறுவெல்லாமயிர்தழுதும், அஞ்சாமல் சாதிக்காய்பத்திரியின் தூளில் துளியிரண்டு தேன்விடுத் தயிலமூட்டே. 659

ஊட்டியுண்ணத் தாது வெல்லாம் பொறுத்துநிற்கு முத்தமனே கொடிவேலித்தயிலந்தாட்டி, கூட்டியுணணக்கடிவிஷங்கள் தீருகதீரும் கொண்டசனஞ்மசரியாட்டால் கடுகிலூட்டி, வாடடியிடும் பித்தமெலாந்தீரவென்றால் மைந்தனே வெறாச்சத்தண்ணீராகும், வீட்டில் வளர்சிறுகிரை வெந்ததண்ணீர் வேதித்துக்கொடுத்திட மேகம்போமே. 660

மேகம்போமித்த யிலத்துடவணிமேலூட்ட மேவிநின்ற களிம்பற்றுச்சொர்ணமாகும், மேகம்போல் லோகங்கள் பொன்னுமாகும் வெள்ளிவங்கமிரும்பு செம்புபொன்னுமாகும், மேகம்போமிக்கருவை வெளிவிடாதே வேதையாயகாய சித்திகாயுத்திரும், மேகம்போஞ் சூதசெந்தூரங்கேளு விபரமுடன் புலத்தியனே விரும்பிநீயே. 661

சூதசெந்தூரம்.

விரும்பிக்கேள் சூதமொன்று கெந்திரண்டு மீறாமல் கருந்துளசிநீராலாட்டி, விரும்பிக்கேளிரண்டுதினம் குப்பிக்கேற்றி விபரமுடன் சீலைமண்தானேழுஞ்செய்து, விரும்பிக்கேள் குப்பியிட வாய்க்குத்தானும் வெண்ணுப்புபச்சைமண்ணு முப்புங்கூட்டி, விரும்பியேயாட்டியதை விரல்போல் திரித்து மேல்வாய்க்குளழுத்திநன்றாய் வைத்திடாயே. 662

வைத்திட்டயடிகனத்த பாண்டத்தூடு மைந்தனே தமரிட்டுமணலைகொட்டி, வைத்திட்ட விரல்கனத்தாலதாக வாகாவதின் மேலேகுப்பி வைத்து, வைத்திட்ட குப்பிக்குக் கழுத்துமட்டும் மணல் சொரிந்து

வாங்கியதோர் மருந்ததனைச் சிலேயிலூட்டு வாகாகச்சங்குவாய டைத்துச்சுற்றி, வாங்கியதோர் மண்செய்து கச்சமட்டும் வாகாகக்குழி வெட்டிப்பாதிமட்டும், வாங்கியதோராட்டெருவை யதிலே கொட்டி மணல்கொட்டி நெற்குழிபோல் வளைந்துபின்னும், வாங்கியதோர் பாணிதனையதன்மேல் வைத்து மைந்தனே யாறுதிங்களாட்டியங்கே. 657

ஆறுதிங்களானபின்பு திறந்துபார்க்க வப்பனே நீலநிறத்தயிலமாகும், வேறுவினையொன்றுமில்லை தயிலங்கொள்ள வேதாந்தத்தாயெனக்கு விரித்துச்சொன்னாள், மாறுவிதமணல்படத் தயிலமாச்சுமகத்தான தயிலமது மரணமில்லை, யேறுவிதம் வியாதிகடகு வனுபானந்தானென்மகனே மஞ்சள்சாறிடித்திடாயே. 858

மஞ்சள் சாறதிலூட்டு மகோதரங்கள்தீரும் வளர்நிம்பச்சாற்றிலிடக்குலேசோவுதீரும், மிஞ்சாமல் வெருகம்வேர் தயிலம்வாங்கி வேதித்துக்கொடுத்திடவே குஷ்டந்தீரும், அஞ்சாமல் சீனிமேல கொள்ளக்கொள்ள அப்பனே தாதுவெல்லாமயிர்தழுழும், துஞ்சாமல் சாதிக்காய் பத்திரியின் தூளின் துளியிரண்டு தேன்விடடுத் தயிலமூட்டே. 659

ஊட்டியுண்ணத்தாது வெல்லாம் பொறுத்துநிற்கு மூத்தமனே கொடிவேலித்தயிலததூட்டி, கூட்டியுண்ணக்கடிவிஷங்கள் தீருநதீரும் கொண்டசனஞ்சரியாட்டால் கடுகிலூட்டி, வாடடிவிடும் பித்தமெலாந் தீரவென்றால் மைந்தனே வெறுநீசத்தண்ணீராகும், வீட்டில் வளர் சிறுகீரை வெந்ததண்ணீர் வேதித்துக்கொடுத்திட மேகம்போமே. 660

மேகம்போமித்தயிலங்குடவனிமேலூட்ட மேவிநின்ற களிம்பற்றுச்சொர்ணமாகும், மேகம்போல் லோகங்கள் பொன்னுமாகும் வெள்ளிவங்கமிரும்பு செம்புபொன்னுமாகும், மேகம்போமிக்கருவை வெளிவிடாதே வேதையாயகாய சித்திநோயுந்தீரும், மேகம்போஞ் சூதசெந்தூரங்கேளு விபாமுடன் புலத்தியனே விரும்பிநீயே. 661

## சூதசெந்தூரம்.

விரும்பிக்கேள் சூதமொன்று கெந்திரண்டு மீறுமல் கருந்துளசி நீராலாட்டி, விரும்பிக்கேளிரண்டுதினம் குப்பிக்கேற்றி விபாமுடன் சீலைமண்தானேழுஞ்செய்து, விரும்பிக்கேள் குப்பியிட வாய்க்குத்தானும் வெண்ணுப்புபச்சைமண்ணு முப்புங்கூட்டி, விரும்பியேயாட்டியதை விரல்போல் தீர்த்து மேல்வாய்க்குளழுத்திநன்றாய் வைத்திடாயே. 662

வைத்திட்டயடிகனத்த பாண்டத்தூடு மைந்தனேதமரிட்டுமணலை கொட்டி, வைத்திட்ட விரல்கனந்தானலதாக வாகாவதின் மேலேகுப்பி வைத்து, வைத்திட்ட குப்பிக்குக் கழுத்துமட்டும் மணல் சொரிந்து

கூட்டடுப்பில்வைத்து நீரும் வைத்கிட்ட மந்தாக்கினிதன்னை மூட்டி மைந்தனே யிரண்டுபத்தை சாமமாட்டே. 663

மாட்டடா காமாக்கினி பத்துசாமம் வளமாகச் செந்தூரமாகும் பாரும், நீட்டடா ஆநியிலை விறக்கிப்பாரு கிறங்கிசிர கோபம்போல் சிவப்புமாகும், மட்டடா வித்தயிதைமிறக்கும்போது மாயிக்குப்பூசை நன்றாய் வைத்துமே, மூட்டடா வதுபானத் துணையோடொக்க வொவ்வொன்றாய்ச் சொல்லுகிறே முனிக்கேளே. 664

கேளப்பா பொரிமாவில் செந்தூரம் பணந்தான் கொடியாகவுண் டிடவே சத்திசாம் போகும், ளளப்பா வுள்காய்ச்சல் போகவென்றால் நலமாக மூன்றெருக்குத் துட்டி, ளளப்பா சர்க்கரையில் தாபசுரம் போகும் சயகாசந்திசெயன்றாலிஞ்சிச்சாற்றில், வாளப்பாசாத்தியமாஞ் சுரங்களெல்லா மாறவென்றால் னொச்சிச்சாற்றில், வாளப்பா சாத்திய மாஞ் சுரங்களெல்லா மாறவென்றால் நொச்சிச்சாறள்ளேயூட்டே. 665

ஊட்டுவாய் வயிற்றுவலிசீதப்பீழி இத்தனிச்சப்பிலே யூட்டு மைந்தா, நீட்டுவாயஷ்டகுன்மம் போகவென்றால் நேரான கொடிவே லிக்கியாழத்தூட்டு, மூட்டுவாய சன்னிவகை யொழியவென்றால் முத் தங்காய் கியாழத்திலூட்டுவூட்டு, நாட்டுவாய் திரிதோஷ மொழியவென் றால் நலமான திரிபலைக் கியாழத்தூட்டே. 666

கியாழமிட்டு அரோசிகரமொழிளவென்றால் கடுஞ்சுக்கு மெல்லு மிவை சமன்வறுத்து, கியாழமிட்டு இவையிரண்டு கூட்டியூட்டு கண் கொண்ட பவுத்திரங்கள் போகவென்றால், கியாழமிட்டு அமுக்கிருக் கிழங்குவெத்து கன்னிகட்குக் கெற்பவிப்புருதியானால், கியாழமிட்டுத் தேரடைநீர் தன்னில்மேயும் கரியாணுமிளகுநன்று யரைத்திட்டாயே.

அரைத்தவொரு மருந்ததனைச் செந்தூரஞ்சேர்த்து அருந்திடவே பாண்டுவகை யஞ்சுந்தீரும், இரைத்தவொரு மதிமெட்டுக் குட்டம் போக யோரண்டத்தயிலத்திலூட்டுவூட்ட, நிரைத்தவொரு அருமூலம் போகவென்றால் நேர்கருணைச்சாறதனி லுண்ணப்போகும், பரைத்த தொருபத்திரண்டு மேகம்போக பருத்திவிரைத் தயிலத்தில் பாச்சு பாச்சே. 668

பாச்சப்பா காதிரண்டுங் கேளாதென்றால் பன்றிமுன்னைப்புங் கெண்ணெய்கொண்டு ஆட்டிப், பாச்சப்பா காதுகளிலடைத்துக் காற்றுபடாமலே பஞ்சுகொண்டு வடைத்துநன்றாய், பாசப்பா வீட் டிலே மஞ்சியோரம் பாங்காக மூன்றுநாளிருக்கக் கேட்கும், பாய்ச் சப்பா வயித்தியங்களின்னமுண்டு பார்த்தெல்லாம் சுருக்கியிதில் பாடி னேனே. 669

யாழமொன்று செப்புகிறேனப்பா திரிபலையுஞ் செவ்வியமு முத்தக் காசே. 1149

முத்தக்காசரத்தை கொத்துமல்லி சித்திரமூல மோசமோசுக்கை வெங்கார மக்கிராகாரஞ், சிற்றுமுட்டி பேராமுட்டி. தொடை வேரிலை யுஞ் செம்முள்ளி செருஞ்சியொடு சொட்டிவேரும், வெற்றி பெறும் முக்கிருமலைதாங்கி வில்வம் வெட்டிவே ரிலாமிச்சுகரிசாலை புடோலும் எத்திசையும்புகன்றாதி கண்டங்காரி யிலுப்பைப்பூச சிறுபூளை நீர்முள் ளிவேரே. 1150

முள்ளிவேர் நன்னாரி கற்றாழைச்சாறு முன்னைவேர் பெருங்குமிழ் வேர் முப்புரங்களெரித்தான், கள்ளமில்லா நிலவேம்பு விஷ்ணுகாந் தி கற்கண்டு கிராம்பு சிறுதேக்கினோடு, தெள்ளுங்கோஷ்டம் பேரீச்சு முந் திரிகைமதுரம் தெசாபுரம் சந்தனத்தின்பொடி தேவதாரம், விள்ளுகடு குரோகணி பற்படாக மிலவங்கம் விழிசிடபட்டை தாமரை வளையஞ் சேரே. 1151

கோடாவகையொன்று கழஞ்சியொன்று திறமாக விடித்ததூள் பதின்கூறிட்டு, வாரடா கூறொன்றுக் கிருநாழிநீரும் வற்றவைச்சு எட் டொன்றாயந்திசந்தியாகப், பாரடாதிப்பிலித் தூள்தூவித் தேன்விட் டுப் பருவமா யஞ்சுதினை மருந்தினுக்கால், சீரடா சகலசுரம்விட்டுவாங் கும் சித்திரமாயின்னமொரு கியாழங்கேளே. 1152

விஷபாகசுரத்திற்கு.

இன்னமொரு கியாழங்கேள் விஷபாகசுரத்துக் கியம்புகிறேனினி வெள்ளிசிறுபூளைவேறும், பின்னமில்லா விலாமிச்சம் மூக்கிரு நன்னாரி பெருங்குமிழ்வேர் கிந்தியொடு முன்னைபாதிரியும், சன்ன இலவங்ககடு விழிகுறுந்தொட்டி தாமரையின் வளையமொடு நெரிஞ்சிமுத்தம் ரேசு கன்னயஞ்சேர் கண்டுமுள்ளி சிறுகாஞ்சோரி நல்லசிற்றாமணக்கு மூவர் கற்றாழஞ்சருகே. 1153

சருகுடனே மலைதாங்கிப் பற்படாகஞ் சாரணைவேர் தோடைவே ர்கூவிளமலரொடு, மருவுசிற்றாமல்லிவேர் பேராமல்லி வாதத்தை மடக் கிவேர் திரிகடுகு செவ்வியம், பெருகுதிப்பிலிமூலம் சிற்றரத்தை கோட் டம் பேரீச்சம் சிறுதேக்கு தெசாபுரமேல், முருவாகவகை யொன்று கழஞ்சிகொண்டு மொன்றாக விடித்ததுள் முக்கூறாக்கே. 1154

ராக்கியதோ ரொருகூறுக்கிருநாழிநீரு மப்பனே யெட்டொன்றா ய்க்குறுக்கிவாங்கி, தேக்கியதோர் பொரிகாரங் கழஞ்சிமூன்றுதிறமாகச் சுத்திசெய்து பொரித்துக்கொண்டு, நீக்கியேயந்திசந்தி யொரிகாரந்தூ வி தினைவோடே மூன்றுநாளருந்திணுக்கால், பாக்கியங்கள் செய்தவர்க் கிந்நூலின்படியே பத்தியாய்க் கொண்டுவரப் பறக்கும் விஷபாகம்.

### ஏலாதி மாத்திரை.

பாகமா யேலாதிமாத்திரைதன்னைப் பாடுகிறேன் புலத்தியனேகண் பாய்க் கேளு, ஏகமா யிலவங்கம் வால்மிளகு இசைந்த திரிகடுகுட னேசன்ன இலவங்கம், வேகமுள்ளசிற்றரத்தை திப்பிலியின் மூலம் வெட்டி வேரிலாமிச்சு செவ்வியமதிவிடையம், தாகம்விடுமதி மதுராஞ் சீரகங்க ளிரண்டுந் தாளிசப்பத்திரி கடுகு ரோகணியுஞ் சேரே. 1156

சேரப்பா இரிபலையிங்கிருசாலரியோமம் தெசாபுர மக்கிராகாரம் முத்தக்ககாசு, சேரப்பா சாதிக்காய்பத்திரி கிராம்பு சிறுநாகங் குங்கு மப்பூக் கற்கடகசிங்கி, சேரப்பா வமுக்கிருநன்னாரி கொத்தமல்லி சீனி கற்கண்டு முந்திரிகை பேரீச்சு, சேரப்பாமாதளையினோடு பொரிகாரஞ் சிலை கெவுரி தாரம் விசவாசுரங் கெந்தம். 1157

கெந்தமடாலாக்காயுங் கூகைநீறுங் கெடியானகோரோசனை கஸ் தூரி புழுகும், பந்தமுள்ள சாலிங்கம் சாபிராணி காந்தம் பகாரத வமிர்த சர்க்கரையுங்கூட்டு, இந்த வகைக் கொருகழஞ்சு சுத்தவகைப் படியே எடுத்தபின்பு செந்தூரம் சேரும்வகைகேளு, மூந்தரசசெந்தூ ரங் காந்தமப்பிரக முறையோடே தாம்பிரமும் வங்கஞ்செந்தூரம். 1158

செந்தூர மிந்தவகைக் கொருகழஞ்சு சேரடா விவைபெல்லாங் கல்வத்திட்டு, பந்தூருமிரண்டுநா ளிஞ்சிச்சாற்றில் பண்பான மாதளம் பூச் சாற்றிரண்டுதான், வெந்தூரு மாதளம்பழச்சாற்றிலாட்டு வித ருமமிரண்டுநாளானபின்பு, விந்தூறும் பனிநீரிலிரண்டு தினமரைத்து மேலான குளிகை சிறுபயறளவுகட்டே. 1159

கட்டியதோர் குளிகைதன்னை நிழலுலர்த்திக் கலைக்கொம்புச்சிமி ழிலே யடைக்குமுன்னே, தட்டிலா தானியபுட மண்டலந் தானப்பா தாழ்வில்லா திருந்தபின்பு தானெடுத்து, அட்டியில்லா தனுபானமப்படி நோய்கண்டு அருந்திலுஞ் பிணிபலவுமாண்டதைபா, திட்டித்தாற்போல் கேட்கும் பூரணகற்பிணியின் சித்திரம்சுவாசமுடன் சன்னிக்குள்ளே.

### சன்னிசுரம் சுவாசத்திற்கு.

சன்னிசுரம் சுவாசமேலேப்பமொடு தணியச்சாற்றுகிறேன் முலைப் பாலில் தரித்துண்டையொன்று, உண்ணியே யிருபோதுமூன்று தினஞ் செலுத்த ஓடுமடா தலைமுதலனைவருக்கு மூட்டு, பின்னின்ற தொத் திப்புச் சுரதோஷம் தீரப் பிசகாமல் மிளகுடையகியாழமிஞ்சிச்சாற்றி, லிங்கிலத்துத் தோடையிலைமிளகியாழத்திலிட்டருந்தத் திட்டெனவே நிற்கு மின்னங்கேளே. 1161

### சன்னிபதிமூன்றுக்கும்.

இன்னங்கேள் சன்னிபதின்மூன்றுக்குமப்பா இஞ்சியொடு சிற்ற ரத்தை முலைப்பால் வேப்பந்தோல், இன்னங்கேள் முருங்கைத்தோல்

வெள்ளுள்ளித்தயிலம் இதற்கிசைய புட்டவியல் பூநாகத்திட்டா, லின்னங்கேள் சன்னிபல சுரங்கள் தோஷ மென்மகனே விட்டோமியல்பாம்பாரு, இன்னங்கேள் க்ஷயரோகந் தீரவென்று வியல்பான புட்டவியல் தேனுமேற் பொடியே. 1162

மேற்பொடிகேள் திப்பிலிசிற்றரத்தைதன்னை வெருகடி தூளுடன் குளிகை வெதுப்பி லொன்றுசேர்த்து, மேற்பொடி யிப்படியே தானருந்தினக்கால் விட்டோடும் க்ஷயரோகமிருமலெல்லாம், மேற்பொடியே பின்னுமனுபானஞ் சொல்வோம் வீறுனகிராணியதிகாரந்தீர, மேற்பொடியாஞ் சாதிக்காய் பத்திரிகிராம்பு வெட்பாலை குறுசாணியக்கிராகாரம். 1163

காரமுடன் பெருமாத்துப்பட்டையடா மாஞ்சிகருஞ்சீரகம்வால் மிளகு மலைதாங்கி, பாரமுள்ள முத்தக்காய் மாதளத்தின்தோடு பாங்கான வதிவிடையம் வெதுப்பித்தூளாய், ஈரமுள்ளமுத்தக்காசு பெருமரத்துப்பட்டை யினியமலைதாங்கி வேர்சிற்றரத்தை சமனுய் சீராக நறுக்கி சிருநாழிநீரில் திறமாகக் கிராம்புபத்து முடிந்துபோடே. 1164

முடிச்சிட்டுக் கிராம்புடனே யெட்டொன்றுக்கி மூலமதிசாரம் வயிற்றளைச்சலுக்குப், படிச்சிட்ட வந்திசந்தி கிராம்பரைத்துக் கலக்கிப்பதியவே குளிகையிட்டு மேன்பொடிதான்சேர்த்து, குமுச்சவுடன் நாலைந்து தினத்தில் நிற்கும் குன்மமெனும் வாய்வுக்குக்கூறக்கேளே.

குன்ம வாய்வுக்கு.

கூறக்கேள் சாரணைவேர்க்கு வேப்பலகு கொடியம்தாரு கியாழத்திற் குளிகைநீட்டி, கூறக்கேள்வியாதிகண்டுவனுபானத்துாட்ட கொடுபிணிகளனுகாது குளிகைவெகுபோக்கு, கூறக்கேள் மூலமொடு கிராணிவாய்வுக்கு கொஞ்சமொரு லேகியத்தைக் கூட்டடாநீ, கூறக்கேள் பழம்புளியுங்கூகைநீறும் குறைவில்லாவெள்ளுள்ளிப்பருப்புங்கூட்டே.

பருப்புடனே வகைக்கு ஒருபலந்தானப்பா பண்பானகாரெள்ளுப் படிமூக்காலும், விருப்புடனே வெல்லநாற்பலமுங்கூட்டி விரைந்திடிக்க யிருசாமம் லேகியமாமேலும், தரும்புவனமந்திசந்தி தான்றிக்கா யளவு தானருந்த மூலமென்றகிராணிவாய்வு, மிரும்பிருந்து குடைந்திரையும் கழிச்சல்ரெத்தஞ்சீதம் எப்பமொடுபொருமல்வலி யெல்லாம்போமே

பேய்ப்புடல் கடுக்காய்நெல்லி பேரியதோராடாதோடை தூய்ப்புள்ள கண்டங்காரி மரமஞ்சள் கடுகுசெம்முள்ளி, தாய்ச்சுக கோடி

சைந்த வேலிப்பருத்தி திப்பிலிதானப்பா, வாய்ப்புடன்வகைக்குமூன்று
களிஞ்சுதானிடித்துப்போடே. 1168

போடு முக்கூறு செய்து பொலிவுடனொருகூறுக்கு, நாடியேயிரு
முழி நீர்கலம் பெறக்கடுகுரோகணி, பேடியாதொரு கழஞ்சுமூன்றாக்கி
முடிஞ்சுபோட்டு, வாடாதே யெட்டொன்றாக்கி வடித்தந்தி சந்தி
கொள்ளே. 1169

கொள்ளவே பனிசுரங்கள் கூறியமலபந்தங்கள், தள்ளவே கியா
ழஞ் சொன்னோம் தனிவிஷசுரங் கனப்பு, மெள்ளவே மூர்ச்சைவேர்
வை குளிர்நளிர் கண்டதற்கு, எள்ளலாய்க் கியாழந்தன்னை யியம்புவே
னெளியசுக்கே. 1170

வேறு—மலபந்தமுதலானதுகளுக்கு.

சுக்குசெவ்வியங் கொத்தமல்லி துடியாங்கோண்டுபரங்கிபுடோல்,
சுக்குந் திப்பிலிப்பிலிமூலங் கண்டாங்காரி யிலவங்கம், மிக்கயேல மதி
மதுரம் மிகுந்தசிந்தி பற்படகம், பக்கநாரிக் கொடிதூவி முத்தக்காசு
பரிந்தெடுமே 1171

எடுமேயாடாதோடையிலை யிலாமிச்சிருவேலிருகழஞ்சி, படுமே
யிடித்துப் பொடியாக்கிப் பண்பாய்மூன்றுகூறுமிட்டு, இடுவாய் கூறுக்
கிருநாழி நீருமுழக்காய்வற்றிவரும், கெடுவாயென்றே விட்டோடும்
கியாழமொன்றின்னங்கேளே. 1172

வேறு.

இன்னங்கேள் முத்தோஷ விஷசுரக்கழிச்ச இபல்பில்லாக் கக்க
லொடுப் பனிர்குளிர்தீர், நன்னயஞ்சேர் கொடிப்பூவி நாரி முத்தக்காசு
நல்லதிரிபலையோடு வீழிபட்டை, மின்னியதோரிருவேலியிலாமிச்சம்
வேறு மிகுந்ததாமரைவளைய மிவைபத்துந்தான், சொன்னவேர் வகை
க்கு முக்கழஞ்சி கூட்டித் தூளாக விடித்து முக்கூறு செய்யே. 1173

செய்யடா வொறுகூக் கிருநாழிநீருஞ் சிறக்கவே விட்டதையு
மெட்டொன்றாய்க் குறுக்கி, வையடாயிருபோது தின்றுதினமருந்து
மகத்தான குளிர்சுரங்கள் மாறல்விஷபாகம், மெய்யடாவத்தசுரங்குறு
வேர்கைதாகம் விகடசுரமித்தனையும் போகும், பொய்யடா வொன்று
மில்லைவிஷபாகமொழிய பூட்டுறேன் கியாழமொன்று தலைதங்கிவேரே.

விஷசுரத்திற்கு.

மலைதாங்கி திரிகடுகு புங்கம்பட்டை வகையஞ்சு கொன்றைவாரா கன்பட்டை, நிலையாக வெட்டியதை யிடித்துகூறாய் நோசமூன்றாக் கியொரு கூருக்குச், சலமுமிரு நாழிதனை யெட்டொன்றாக்கிதச மூன் றாறு பொழுதுண்ணத் தீரும், பலசுரங்களழியுமே சுரமும் போகும் பண்டுற்ற நடுக்கல்சுரம் பறக்குங் கொத்தமல்லி. 1175

கொத்தமல்லி திரிகடுகு பேராமுட்டி கோலத்தோலியும் வகைக் குமொரு கழஞ்சிகூட்டி, பத்தரவேயறைத்துவொரு நாழிநீரிற் பரிவு டனே கலக்கியதை யெட்டொன்றாக்கி வெற்றிபெற வொவவொருபேர் தருந்தவந்து, வீறடங்கி நடுக்கலன்றவெப்புந்தீரும்சத்தியமாய் மிளகு கியாழுந்தானுண்ணத் தானடுக்கல்விரதீரும் சத்தியமாஞ்சுக்கே. 1176

வேறு.

சுக்கோடு கொத்தமல்லி துலங்குதேச புரமூன்று, மொக்கத்தட்டி யொருபடி நீருடனே யெட்டொன்றாய்க்குருக்கி, மிக்கவந்தியம் புமது விரைந்து வூணுங்கழிந்தபின்பு, சிக்கக்கியாழமொரு போதா திவசந் தோறுங் கொண்டிடுமே. 1177

கொண்டுவரவே விஷமழியும் குருவேர்வையும்போம் பசியெடுக் கும், பண்டேவந்த வுள்சுரமும் பறக்குமே துணையாது, விண்டார் வெறுவெந்தயஞ்சிக்க வெதும்பிமிளகிட்டொருபடிநீ, ருண்டாம்படிக் கியெட்டொன்று யுண்ணுமிரவிலிப்படியே 1178

இப்படியஞ்சுநா ளிறவிற்கொண்டிட, வெப்பொடு உள்சுரமாந் தம் வேர்வையுங், குப்பெனக் குதித்திடுங் குடல்குளிர்ந்திடுஞ், செப் பிஞேே மினிச்சுர மாந்தைசுக்கொடே. 1179

சுக்குநறுக்கு மூலமொடு துலங்குமொசுமொசுக்கை வேரிவைகள் ஒக்கவைக்கோர் கழஞ்சிகட்டி யொருபோதருந்த வோர்படிநீர், தக்க தாழாக்கெனக்குறுக்கு தாகப்பஞ்சதாரையிட்டு, வொக்கக்குடிக்கநெஞ் சிருமல் வேறுஞ் சுரமாந்தையும் பேயே. 1180

பேய்ப்புடல் பாடகம் பேராமுட்டி, மிளகுசுக்கு வாய்வுள்ள விஷ் ணுகரந்தி, மகிழ்ந்த நாரத்தப்பட்டை காய்ப்புடன் வகைக்கோமூன்று கழஞ்சிலை யிடித்துக்கூராய்த் தெக்கிய மூதற்குறுக் குருத்தின மிரு நாழிநீரே. 1181

நீரிருநாழிக்கே தாமெருகூறு நேய்த்தோடுவீரமா யென்டோன் முக்கி விரும்பித் தேன் கலந்தருந்த சீராப்புச் சுகமுந்தீரும் தீனது விளைந்தே யேறும் பாரமாந் தலைநோய் போக்கும் பகர்சிந்திக் கியா மூங்கேளே. 1182

வேறு-சிலேர்பனசுரத்திற்கு.

சிந்தி முத்தக்காசு ரெட்டிபேய்புடல் பாகஞ்சுக்கு திரமாகவதிற் பாதி சோதித்திடித்துகூறுய்ப், பந்தாமலொருகூறுக் கிருநாழிநீரும் பண்பாக வெட்டொன்றுய் குறுக்கியதைவாங்கி, சாந்தமாய்த் தேன் கலந்து மூன்றுதினமறுந்து தகர்ந்து சிலேற்பன சுரந்தான் தணியுமப் பா, காந்தவெரித்தாறுப் புண்கிரந்திக் கெல்லாம் களிப்பொன்றுசொல் லுகிறேங் கண்டுமாரே. 1183

களிம்பு.

கண்டுபார்களிம்புக்கு வகையைக்கேளு கடுமிரதந்துத்த மொடு காசுக்கட்டி, பண்டிதுள்ளவெள்ளைக் குங்கிலியம் நோய் பதியவோச மானக்கல்வத்திட்டு, விண்டவதில் கற்றசுண்ணம் நெல்லிக் காயளவு வேதிச்சுரைத்தாவின் வெண்ணெயதின்ரெட்டி, கொண்டுமேவிரு சாம ம்நன்றுயாட்டி கூறுகச்சிமிளிலேயடைத்திடாயே. 1184

அடைத்திட்டகளிம்பதனை புண்பொடிகட்கிட்டு அப்பனேபழ ங்காடி புளியிலையும்வெந்து, புடைத்திட்ட புண்கழுவி களிம்புபோட போகாதகிரந்தியொடு சூலைபுண்கள், படத்திட்டதிவையெல்லாம் பறந் தேயோடும் பழயபுண்கள் கருத்தழும்புபதின் கோடிபறனே. 1185

கொடித்தூவி வேரிழைச்சுக் கிழியாய்கட்டி கோவின்பாய் வெள் ளாட்டுப்பால் சரிநீர்விட்டு, அடுப்பிலேவேகவைத்து நீர்வற்றும்போது அப்பனே கிழிப்பித்துவப்பால்கொள்ள, இடுக்கிலே பட்டயெலிபோல விஷமழியு மிசைந்தமலக்கட்டு சலம்விஷபாகமெல்லாங், கடித்திடாதே போகுஞ்சுரவீறில்லேச் சாதகமாம் வெறுசுரசாற்றுறேனே. 1186

கோரைக்கிழங்கு கொடித்தூவி கோஷ்டஞ் செவ்வியங்கொத்தம ல்லி, வீரமுடையதாதுவளை விஷ்ணுகாந்தியிலமாச்சு, சாரமுடையவதி மதூரந் தனிசுக்கு யிலவங்கம், மாராப்புடோல்முள்ளி வேர்பற்றிடாகம் பாகரேலம். 1187

ஏலத்திப்பிலி திப்பிலிமூல டிசைந்த கண்டங்கத்திரியும், ஞாலத் தாடாதோடைப்லே நன்னரிவேர்சிந்தியொடு, சீலத்துடனேயிருகழஞ்

சிலேவிருபத்தொன்றிடித்து, காலத்துடன்முக்கூர்செய்து காயப்போட்டுக்கொள்வீரே. 1188

கொள்வீரே அஞ்சிக்கிருநாழி நீர்விட்டொன்முக்கியதை, யுள்ளே குடிக்கமூன்றுதினத் தோடுஞ்சுரவிறற்றுவிடுங், கள்ளந்தீருங்கசடுமெறுங் காலாகாலமருந்திமர, தன்னில்போலவிருத்தாடு மயக்கந்த வீர்குமாமயிலே. 1189

மயிலேஜன்னிதோஷமுதல் வாதபித்தஞ் சிலேற்பனமும் குயில்போலிரைச்சல்மலபந்தக் கூறுஞ்சலக்கட்டிவையெல்லாம், பயிலாய்த்தீரும்விஷபாகம் பண்பாய் காட்டுச்சீரகந்தான், ஒல்லாய்மூன்றுகழஞ்சிதன்னை யொவ்வோர்கழஞ்சிதன்னை யொவ்வோர் கழஞ்சிலேயிடே.

இடுவாய்சலந்தானிரண்டுபடி யெட்டொன்ருக்குறுக்கி யந்திசந்திடுவாய்மூன்று தினத்தாலே விஷமுமழியுஞ் சுரமும்போம், கெடுவாயின்னநற்சுவையி லேழெல்லாம லுலர்ந்ததண்டு, படுவாய்மூன்றுதுண்டுயிருநாழிநீரில்வற்றவையே. 1191

வற்றவைப்பாயெட்டொன்றுய் மறுத்துமந்திசந்தியுண்ணு, மற்றேபொருமவிஷபாக மறையைக்கேளு மின்னவகைப், பற்றச்சுர்றைதான்தழைபச்சை யரிந்துகழுநீர்படியொன்றில், வெற்றிபெறவே வேகவைத்து மிளகுமுள்ளிதட்டியிட்டு, சித்தியாகத் தேனுடனே சேர்த்து அருந்ததீர்ந்திடுமே. 1192

தீர்ந்திடுமேவிஷபாகவீக்கஞ்சோபம் சிக்குமலக்கட்டு நீர்தெளிந்துபோகும், தீர்ந்திடுமேவேர்க்கொம்பு ஓமம்வெள்ளுள்ளி சீரகங்கள் மூன்றுடனே கிராம்புசேரும், தீர்ந்திடுமேயிலவங் கடுகுரோணிதிகையாமல்வகைக்கொன்ருகழஞ்சியொன்று, தீர்ந்திடுமேயிவையிடித்து முக்கூறிட்டுத் திறமாகக்கூறொன்றுக்கிருநாழிநீரே. 1193

நீரோடே முடிச்சிடவே மருந்தைக்கேளு நிறைக்கினேன் சாதிக்காய்பத்திரிகிராம்பு, பேரானதும்ராஷ்டவகைக்கும் கால்கழஞ்சு, பிசகாமலறுகூறு முடிச்சுமிட்டு, சீராகவனல் மூட்டி யெட்டொன்ருக்கி தினமொன்றுக்கிருபோது முடிச்சரைத்துக்கொள்ளு, கோராக விப்படியே மூன்றுதினமருந்த நின்றுபோம்பிணியனைத்தும் நிலேக்கொட்டோடும்.

ஓடும்விஷசுர மொட்டியதனைச்சுரம் பாடிசவுட் சுரம் பனைப்புத்தோன்றுதல்கூடிமலசலக்கட்டு கொண்டஅஞ்சாடிடுஞ் சவ்வீரவைபுக்கல்லுப்போடே. 1195

வேறு-வீரவைப்பு.

கல்லுப்புவெடியுப்புச் சீசனக்காரங் கட்டியதோர்வாச்சாரமன்ன பேதி, வெல்லவல்லமையில்துத்தமாச மோடேழும் விளம்புதல் சவ்வீரவைப்புசெயநீராக, கெங்காசலக்குப்பிக்கேற்கலம் பெறவேழுச்சீலை மண்ணுஞ் செய்துசொல்ல, வரிதானசிவன்சத்தி பூசைதொழில் முடித்து மண்பாண்டக்குப்பிவையே. 1196

தைத்தமண்குப்பிக்கு மட்டாவிட்டு வாகாக மூத்தியுமாறுமவே தான், பத்திரமாய்மூன்றுதின மெரித்துப்பின்பு பாங்குடனேபூசைவிதிப்படிநடத்தி, மற்றுநாள் குப்பியெடுத்தாற்பதங்கமேறி வாதியென்றவீரமெனும்வகுப்பார்பாரீர், கத்தின்சீழ்ப் பிடியது செந்தூரமாகும் சாத்தையவுரிச்சார் விட்டரைக்கலாமே 1197

அரைத்துவைத்த செந்தூரம் வில்லையாக அடைபிடித்து வுலரவைத்து யப்பால் நல்ல, புறையறவேவராகபுடம் போட்டுப்பின்புடம்பிரித்துச் செந்தூரமதனைவாங்கி, நிரைநிரையாய் நொச்சியிலைச்சாற்றிலோர்நாள் நோனயிஞ்சிமுலைப்பாலிலோர்நாள், வரையாது மூன்றுதினமரைத்துப்பின்பு மாத்திரையுங்கடலை பிரமாணம்செய்யே. 1198

செய்துவைத்த மாத்திரையை நிழலுலர்த்தி சேர்த்திடுவாய் சிமிளிலது சென்றகால, முய்வதுக்கு நறுநெய்தேன் தனிலோருண்டையுண்ணுமிருபோது வரைமண்டலத்தில், நய்யும்விஷமகோதரமுங்குன்மம் நற்காச சுவாசமொடு காசக்கூறும், பையகன்றுபிறிந்து தட்டுக்கெட்டுப் பழவினையும் பறந்தோடும்படி சொன்னோமே 1199

பத்தியம்.

சொன்னோம் நாம் பத்தியத்துவகையைக்கேளு சுத்திசெய்தவுப்பதனைச் சுகமாய்க்கூட்டு, சொன்னோம்நாம் வெள்ளாட்டுப்பால் நெய் கூட்டு துவரையுடன் வழுதலங்காய்ப்பிஞ்சு கூட்டு, சொன்னோம்நா முருங்கையிலைச்சாறு கூட்டு துடுக்காக மற்றொன்று மாகாதப்பா, சொன்னோம் கிரந்தியொடு காப்பான்போகச் சூட்டுகிறேன் வகையாகச் சீனமெனும் புகையே. 1200

வேறு-சீனப்புகை.

சீனப்புகைக்கு வகைகேளாய் சிறந்த ஜாதிலிங்கம் கடுகு, மூனமில்லா கெந்தகமு மொவ்வோரிடையாய்ச் சமன்கூட்டி, ஆனபச்சைபுகையிலைச்சா றதனிநன்று யரைத்தபின்பு, ஈனமில்லாதே கடலைப் பிரமாணமா யுலர்த்திளமே. 1201

உலர்ந்த மருந்தை யெடுத்துவைத்து வேட்டில் புளியஞ்சிராத் தணலில், மலந்தே புகைக்கப் புண்மட்டு மட்டாய்க் கவிழமூடியபின், செலந்துமிழிக்குந் திரைவாங்கிச் சேர்த்துவந்த பின்னந்தி, யுலர்ந்த போதும் புகையெடுத்துப் போக்காயேழு பொழுதினுக்கே. 1202

ஏழுபொழுதிலின்னமொரு புகைக்கு வகைகேளேதென்னி, லா ருஞ் சாதிலிங்கமுடன் திராவகங் கெந்தி கடுகுடனே, ஆழுங்காசிகட்டி யிவையைந்துஞ் சமனாய்விருெடுக்க, நீழப்புகைச்சாங்கான் குழலில் நினைவேழ்போது வாங்கிவிடே. 1203

போதேழினுக்கோரின்னமிந்தப் புகைதான்பிடிக்கப் புளியத்தி யம், பாதகேசபரியந்தம் புகை பற்றமருந்தை பரப்பியபின், மாதே சூழக்கவுசிகளையாய் வளோந்துவேர்வைபொங்கியது, சூதாய்த்திரையை வாங்கியது துவரப்படியே சூட்டிடுமே. 1204

லிங்கம்புகை.

இடுமேயின்னமொரு புகைதானேழுபோது செய்யும்வகை, கடு காஞ்ஜாதிலிங்க மனோசிலையாங் காசுகட்டிகெந்தி, விடுவாந்துத்த மரி தாரம் வகையோர்சமனாய் புகையிலைசாற்றில், தடமார்புடையாயரைத் துலர்த்தத் தானே வைக்கத் தக்கதுவே. 1205

தக்கபுகைக்குதான் புளியந்தணலில்மருந்தைப் பரப்பியபின், பக் கம் புகைகள் சிதறாமல் பாங்காய்க் கவியமூட்டியது, கக்கும் புகையால் வேர்வையெல்லாம் கடுகத்திரையை வாங்கிவிடு, மொக்கத்தவருமிப் படிநீ யேழுபோது முறச்செய்யே. 1206

செய்தபின்பு யெழுபோது திரமாய்விட்டுச் சிரகன்று, பையக்குழி நீர்தனிலிருந்தப் பாலுமூன்று தினங்கடந்தால், வையம் புகழும்விளக் கெண்ணெய் வார்த்துதேய்க்கவுசிலாப்பு, மெய்யாயிது வொன்றறை வருட மிணங்க முழுகிவருவீரே. 1207

வீரமாறுமட்டுமந்த விளக்கெண்ணையைத் தான்முழுகி, வாரந் தீருங் கரப்பன்புண் கிரந்திசேட்டை வியாதியறுங், காரச்சுறுக்குமற்று விடுங் கறிகள் பலவுமாகாது, கூரத்துடனே உப்புமுதற் கோடாதிருக் கச் சொன்னோமே. 1208

சொன்னோ மறைமண்டலங் கடந்தால் சுத்திசெய்த உப்பாகும், மின்னேயவரைப்பிஞ்சு சிறுகீரை முளைத்தண்டதைவிரும்பி, இன்ன தன்றி வேறொன்று மிணங்காதொருமண்டலங்கடந்தால், பின்னைப்ப ற்றி செம்மரை பிலாக்காயுளுந்து மாகாதே. 1209

ஆகாதன்னமறையக்கே ளவரைதுவரை மரும்பயறு, வாகாம்பா கல் கொம்மட்டி மாங்காய் தேங்காய் பூசினி மீ, னேகாதிருக்கிலாறு திங்களெல்லா நோயும் பறந்தோடும், சாகாதிருக்க வெள்ளாட்டுக்கறி யை யுலர்த்தித் தான்கூட்டே. 1210

ரசம்புகை.

கூட்டுஞ் சரக்கு ரசப்புகைக்குக் கொடியயிரதம் பாஷாணம், கூட் டுங் கொதிதாளகமுந் துத்தமிவைகள் சமனாக, ஆட்டுப்பச்சை புகை யிலைச்சாறதனிலரைத்து திரியாக்கி, யிட்டுபுளி யகத்ணல் நெருப்பில் திரியை யொன்றாய் முழுகாட்டே. 1211

காட்டாயே திரிப்புகையைக் கட்டாகக்கவுசினையும், பூட்டாய் புகையால் வேர்வைகொண்டு புகழுந்திரியைப் பிரித்துவிட்டால், பட் டால் துயரந்தான் தணியும் பகலுமிரவும் பத்தியமாய், கூட்டாம் வெள் ளாட்டுப் பாலன்ன முப்பிலாதே கொண்டிடுமே. 1212

கொண்டபுகை நாளளவு மறுபடியே யாறக்குற்றமன்றி, யுண்ட பொசிப்புஞ்சமிச்சக்காலுடன் கையுடனே குளிநீரில், மண்ட மூழ்கிய திலிருக்க வைத்தாற் கடிகையிரண்டரையே, அண்டர் துதிக்க வேழுதி னம் வெந்நீராடவடையாமே. 1213

அவடவாமின்ன மொருபாக மந்தப்புகைக்குமிடர்த் தண்ணீர்யிற வேயிரதி வெயிற்காந்தி பட்டநீரைப்பனிவிழுமுன், திடமாயேழுமிட்ட ணண்ணீர் சேரத்தலையிற் சொரிவரால், கடவேபுகலாய்ப் புகலவிறங் கரசற்சய புண்ணுவகாணுதே. 1214

காணுதே போய்விடுங் கிரந்தி கடுகியெழுந்த புண்முதலாய் வினைசெத்து வேறுமற்று மேனிபழுக்காய் நிறமாகும், ஆணுப்பெண் ணாய் பிறந்தோர்க்கு மாமேழு விளக்கெண்ணெய், நாணுதொன்றை விட்டொருநாள் நாடிமுழுகலாமே. 1215

கலமா மின்னம் புகைக்கு நல்ல முறைநோனடுக்கும் புகையேறிபல நாளளவுமாறியபின் பாங்காய் முழுகும் விளக்கெண்ணெய், விலகா தொன்றை விட்டொருநாள் வீறுமடங்கி யொடுங்கிவிடும், திலதநுதற் கண் சிவனருளிச் செய்தார் சிட்சை செய்வீரே. 1216

சூலைக்குப்புகை.

செய்யுஞ் சூலைகட்குந் தீரும் புகைதான் செப்புகிறேன், ஐயப் படாமல் நல்லகெந்தி யதனைக்குன்றுமணியாகக், கையக்கறுத்தக்கார வுள்ள பழுக்கக்காய் கத்திரிக்காய் பிளந்து, வையம்புகழ் கெந்திமணி வகையாய்ப் பிளந்து, வைப்பீரே. 1217

வைப்பீர் மண்பாண்டந்தனிலே வைக்கலமுக்கி நீர்விட்டு ஒப்பா யதின்மேற் கத்திரிக்கா யொன்றேடொன்று சேராமல், தப்பாமல் நாம் பரப்பியபின் சட்டிகவிழ்த்து தான் மூடிக், குப்பாயேழுசீலை மண்ணுங் கூறுர் பூசியடுப்பேற்றே. 1218

ஏற்றி யடுப்பில் வெந்தபின்பு ம்யல்பாய் புகைகள் கொள்ளுமட் டுஞ்சாற்றுந்திரையைக் கவுசினையாய்ச் சணத்திலிறக்க வேறுபுகை, மாற் றமேற் சட்டியைத்துளைக்கவருமே புகைகளடிக்கொற்றச் சீற்றமென வேபுகைகள் வருஞ் சேர்விடாமல் திகைத்திடுமே. 1219

தினத்தே யேழுபுகை யிந்தப்படி செய்வீர் சூலைபதினெட்டும், பகைக்க தறடுமுறடாகப் பற்றும் விரணமூளைப்புண்கள், தகைக்கஓடிப் போய்விடுங்கா னல்லசிட்சை யிதுவன்றி, மிகைக்கச்சொன்னேம்புகை விட்டால் விளக்கெண்ணெய்தான் முழுகரிதாம். 1220

அரிதாரப்புகை.

அரிதாரத்தின் தகட்டைதானழகாய் காறல்கத்திரிக்காய், தெரிய விரண்டாய்ப் பிளவுசெய்து செய்யுங் கிரிகைப்படி பரப்பிப், பெரிய தாழி யொன்றினிலே பெருகவைச் சலதிலமுக்கி, விரிவாய்த்தண்ணீர் விட்டபின்பு வென்றுந் தகட்டைக் காயவையே. 1221

வைத்து மேலே சட்டிகொண்டு வழங்கக் கவிழ்த்திச் சீலைமண் செய், பொய்த்தே யடுப்பிலேற்றி யனல்மூட்டி யொருசாமங்கிடந்தால், சற்றே விம்பலில்லாமற்றனே திரையைக்கவுசினைசெய், பத்தாய்வேது புகைக்குமில்லி பலவாயிட்டும் பாச்சிடுமே. 1222

பாச்சம்பிகையால் வோவைதனைப் பாசத்தடாரப்படி துவர்த்து, மூச்சுவிடவே திரைபிரித்து மூன்றுமிப்படி செய்வீரே, வாச்சுததனைற் புகையைவிட்டு மறுபத்தியம் விளக்கெண்ணெய், தேய்த்துக் குளிப்பி ரொன்றைவிட்டு, சீராட்டுப்பால்தனைக்கூட்டே. 1223

கூட்டட்டா தொன்றைக் கூட்டிவதை கோடாகோடி குணமுண் டாம், நீட்டிநிமிர்ந்து வுடம்பசந்து நேரே குத்துக்குடையுண்டாய், மூட்டிக் கால்கைதனை முடக்கி முழுதும் வீக்கம் பெரிதாகி, ஆட்டி விட்ட பம்பரம்போ லலைவீர் வீணமதுகாணே. 1224

காணப்பட்ட சூலைமுதல் கைகால்குளைச்சு கறடுகட்கும், வேண வீக்க மதிமயக்கம் வீறுவிரணமுள்ளதற்கு, மாணிபடவே சிக்கினுர்

வேம்பதனுல் தயிலமொன்றிறக்கும், பூணநன்று தயிலமொன்று போடு
வே சேரிலத்தியேடே. 1225

லத்தியெடுத்தே யதில் தயிலம் நலமாய் வாங்கியிம்மூன்றும், பத்
தியுடனே கலந்து வெயில் பருவத்துடனே பிரட்டிவா, முத்துந்தயில
மூடற்கொள் முடங்கிக்கிடந்த கால்கைகள், செத்தேயிருந்த யுடல்வீக்
கஞ் சேரத்தெளியஞ்சி கிச்சையிதே. 1226

## துவாலேபோட.

இதுபோலவேறு மனுபானம் இன்னஞ் சொல்லுவோ மூவாயப்
பாட்டை, சதியவிடித்துப் பழங்காடிதன்னில் வெந்துவிடுமிந்த, விதி
யால் வந்த வியாதிகளும் விட்டேயோடி மிரணங்கள், புதுசாயாவரை
யிலே யிடித்துப்போடு நடவாலேயுச்சிமுதல். 1227

உச்சிமுதலாய்ப் பாதம்வரை யுடம்பிலுறவே துவாலேயிட்டு, அச்
சந்த விருனுக்குடலே யழமாயிள வெந்நீர்குளிக்கத், துச்சந்தீரு மூன்
றுதினந் துவாலே யெடுத்துப்போட்டிடுவீர், கச்சுமூலேவாயிதுவன்றிக்
கட்டும் புகையைக் கழற்றககேள். 1228

கேளாய் நண்டு தேங்காயுங் கெடியாயிடித்துச் சாறுகொள்ளு,
நாள்மூணுக்கு மந்திசந்தி நன்றுயருந்து மதின்பின்பு, ஆளுமாவின்
பால் நண்டுச்சார மருந்தியதன்மேலும், தாழ்வில்லாமல் நல்லெண்ணெ
ய் தனிலே நண்டுச்சாறருந்தே. 1229

அருந்திப்படியே வெவ்வேறுயடுத்து வடித்துக்கொண்டவுடன்,
நெரிந்து முறிந்து பேரய்விடுங்காணிற்கும் கறடுமற்றுவிடும், பொருந்
தும் வினையும் போய்விடுமே புண்கள் தனக்குவுபனியங்கேள், திருந்த
வாவிடா4 தனி சித்திர வெந்துகட்டே. 1230

## சேங்கொட்டையெண்ணே.

கட்டுமருந்திற் கடுப்பெரிப்புக் காந்தல்தணியுங்கண் பொருந்து
மிட்டமூவாயினிலேசாடியிசைய வெந்துவுபனியஞ்செய், திட்டமுடனே
புளியிலேயைக் காடிசேர்த்து வேகவைத்து, சட்டமுடனே யுண்கழுவி
தப்பாதிலேயைத்தான் கட்டே. 1231

கட்டாய் சூலேகரப்பன் புண்கடிய கிரந்தி சிரங்குக்கு, தொட்டா
லதனுல் விட்டோடச் சொன்னேம் தகைவேதுபனியங்கள், மாட்டா
யசடு வையாமல் வகுத்தோ மின்னம்வகை சொல்லக்கேள், குட்டா
யோடச் சேங்கொட்டை கூண்டுமெண்ணே கொடுத்திடுமே. 1232

## வேறு.

சேங்கொட்டை யிருகூறு நல்லகெந்தி தெளிவுள்ள தகட்டாரி
தாரம்கொடு, பாங்குடனே படுபாதிகூட்டி நன்றுய்ப்பரிவுபொடி யுடன்

காச்சத் தயிலமாகும், நீங்காதயோருமிடாத் தண்ணீர்தன்னில் நீதயி லம் விட்டுவைத்துப் பத்துநேரம், வாங்குவாய் நீரெண்ணைபோலெடு த்து ரவியில் வைத்தெடுத்துப் புண்ணிலிட்டுக் குளிக்கவாங்கும். 1233

சலக்கழிச்சலுக்கு.

வாங்காத சலக்கழிச்சல் மாற்றுவிக்கு மகத்தான தயிலமொன்று வகையாய்க்கேளு, பாங்கான யேலமிலவங்க மதிமதுரம், பழந்தேவ தாரமொடு செங்கழுநீர் கோஷ்டம், நீங்காதசாஸ்திரமாம் வேதிமரமஞ் சள் நீண்டசிறு செண்பகமுஞ் சிறுநாகப்பூவும், தேங்காத சதகுப்பை வெந்தயங்கச் சோல மதிரையாமல் வகையொன்று கழஞ்சியாரே.1234

ஆறுக்கிச் சிறுதேக்கு செவ்வியத்தோல் இரும்பு அரத்தையொடு வாய்விளங்கம் வகைக்கு மஞ்சகழஞ்சீ, வீருனசிற்றரத்தை திப்பிலி யும்நல்ல விளாவரிசி யிவைமூன்றுவகைக்கு முக்கழஞ்சு, சீருபிசெஞ் சந்தனம் கடுகுரோகணியுஞ் சிறந்த கொத்தமல்லியிவை வகைக்குநாற் கழஞ்சு, பேருனநெல்லி பத்திப்புழுக்கைவேர் பத்துபேர் பெரியசாதி க்காய் பதின் கழஞ்சும்போடே. 1235

போட்டடா சந்தணந்தான் பலமொன்றரைத்து பொன்சுட்டை வேர் சிட்டாமுற்றி வட்டதுத்தி, போட்டடா நீர்ப்பூலா வேரால் விழு தும் புகழல்லி நீர்வள்ளி நிலப்பனையின் கிழங்கு, போட்டடா ஆவ ரையின் பட்டையோடு பொன்னாங்காணிஎரி கொல்லங்கோவை, போ ட்டடா முடக்கொத்தான் சீரகஞ் செங்கழுநீர் பொற்சீந்திபி லமிச்சு வகைக்கு யெழுகழஞ்சே. 1236

கழஞ்சான யிவையெல்லாம் நொறுக்கிக்கொண்டு கற்றுழஞ்சோற் றிலோரரைப் பரைத்து, விழைஞ்சு தொருதாழை விழுதுச்சாற்றி லரைத்து விரைந்து குமரிச்சாறு ம்மார்படியும் விட்டு, கழஞ்சியாயாவி ன்பால் படிமூன்று சேர்த்து தாக்கடா நல்லெண்ணை யாறுபடியதிலே வழஞ்சியமாயோர் தாழிக்காப்புக்கட்டி வாகாகக் கற்கம்பா லெண்ணை வாரே. 1237

வாரத்தொன்றாய் கலக்கியடுப்பேற்றித் தீயு மட்டாக யெரியவே விநாயகனைப்பணிந்து, நேத்திரமாய் மூன்றுநாள் சிறுகொதியுமிட்டு நினைவோடே நாலாநாள் வற்றக்காய்ச்சிப், பார்த்தந்தம் பதங்கண்டு மெழுகுபதந்தனில் பதறுமலே வடித்தும் பக்குவத்திற், சாற்றினேன் குங்குமப்பூ பச்சைகற்பூரம் சாதிகோரோசினை கஸ்தூரி சட்டல் போடே. 1238

சட்டமடா புனுகுசட்டம் வகைக்கு மூக்கழஞ்சு தனித்தனியே பொடித்தொன்றாய் கலந்துபோட்டு, சிட்டலா யறுபத்து நாலுசித்துந் தெரியவல்ல மாணுக்கா மச்சகேந்திரா, விட்டிடுவாய் தயிலமது வடிந்த பின்பு வேறேயொரு கலசத்தில் தயிலம்வாங்கி, கட்டடா தானியபுடந் தினந்தான் பத்துங் கடந்தபின்பு தயிலமதை கழுத்துக்கீழ்த்தேயே.

கழுத்துக்கீழ்த் தேய்த்தபின்பு தலைக்குமந்தத் தயிலங்கசியாமல் தேய்த்தபின்பு சீயக்காய்பயறைப்பாம், பழுத்துவிடும் வெய்யலிலே முழு காமல் வெந்நீர் பாங்குடனே நாலுநாட் கொருமுழுக்கு கொழுந்திறை ச்சிபால் தயிர்மோர் புளிகைப்புமல்லால், குளுந்தசலம் புகையிலையும் கூட்டலாகா, அழுத்திவிடு மவின்றட்டு மறுநாளேது அசடிடலைவேண் டியது மருந்துவாயே. 1240

## சிலேற்பனதயிலம்.

வாய்ப்பான தயிலமொன் றின்னஞ்சொல்வோ மைந்தனே வகை கேளு யேலங்குந் திரிக்கம், வாய்ப்பானச் சோலமடவிகச்சொல்மரு உசடாமாஞ்சில் கோஷ்டம் நறும்பிசின் சந்தனமும், வாய்ப்பானசாதி க்காய் பழந்தேவதாரம் வங்காரப் பச்சையகில் தன்னிநாயகமும், மாய் பாண கருங்காவிலவங்கம்பட்டை மாகமதுரம் வெந்தய மிலாமிச்சம் வேறே. 1241

வேர்முதலாய் வகையொன்று கழஞ்சியொன்று வித்தேசமில்லா மலிடித்தரைத்து, சாரமுடன் சலமிரண்டு படியிற் சர்த்து தயவாக நல்லெண்ணை படிதான்விட்டு, வீறமுடனடுப்பேற்றித் தீயைமூட்டி விநாயகனைப் பூசித்து யொருநாள்விட்டுச், சீரானபதம் பார்த்து மெ ழுகு பதந்தன்னில் சித்திரமாய் புழுகுசட்டம் கற்பூரஞ் சேரே, 1242

சேரடா குங்குமப்பூ கஸ்தூரிவிவைகள் சிறக்கவொரு வராகனி டைபொடித்துப் போட்டு, வாரடா தயிலத்தை வடித்துப்பின்புவைத் திடுவாய் தானியபுடம்பார்தது நாள்தான் சீரடா நாலுநாட் கொரு முழுக்குமுழுகச் சீயக்காயரப்பு வெந்நீர் சிக்கானதகற்று, போரடாபா ல்தயிர்மோர் புளிகசப்புமல்லாமல் புகயிலையு மாங்கிஷங்கள் பொல்லா துதள்ளே. 1243

தள்ளிவிட்டு மறுநாள்தான் கூட்டுவதுகூட்டு தடையல்லநீரிழிவு மேகமுதல் வெட்டை, தள்ளிவிடுங் கபாலநீர்ப் பிணிசங்களாறுந்த ணலாக யெலும்புரிகிக் மூத்திறமன்றி தள்ளிவிடு மிந்திரசண்டிகல்ல

டைப்பன் சிறப்புத் தாகமொடு பித்தவரை யூஷடினமுந்தணியுந், தள்ளியிடுஞ் சிலேர்பணநீர் மண்டைபீனிசங்கள் தனியத்தி மூர்சைக்குத் தயிலங்கேளே. 1244

மூர்ச்சைக்குத்தயிலம்.

தைலங்கேளி லுப்பைப் பூவிலாமிச்சோடு தனிவேங் கைச்சிராயுன்னேயமுங்கிரு, நன்னாரிமயிலான நிலப்பனேவேர் முத்தக்காசு பங்கமாம்வனேயமொடு கர்வள்ளிக்கிழங்கு, ஓயிலான குறுந்தொட்டி பூமிசாக்கரையிலுடன்கிழங்குவகை யொன்றுபலமதஞ்சு, அயிலாகதறித்திட்டுப்பாண்டததிட்டு அடையமவசலமஞ்சுமரக்காலூட்டே. 1245

ஊட்டியேயடுப்பேற்றித்தீயை மூட்டி யோடுங்கதையெட்டொன்றுய்க்குறிக்கிப்பின்பு, நீட்டியே நல்லெண்ணே படியுமஞ்சி நேராணவாவின்பாலவ்வண்சேர்த்து, மூட்டுவாய்கற்கவகை யேல மிலவங்கமுதுமதுரஞ் சீரங்களிரண்டு மாமஞ்சள் கூட்டுவாய், கெந்த மகிலுடன் செஞ்சந்தனஞ்சிட்டி கூர்சாதிக்கா பத்திரிகிராம்பு சதகுப்பை. 1246

சதகுப்பை கோஷ்டமொடு செவ்வள்ளிக் கொடியும் சார்வாணதேவதாரம் வெட்டிநெல்லிப்பருப்பும், விதமாகவகையொன்று கழஞ்சியஞ்சு வெயிலிலே காயவைத்து யிடித்தாட்டுபாலில், விதப்பல்செய்யாவேகலக்கியெண்ணே சேர்த்து வேகவைத்து மறுநாளில் வடிக்கும்போது, பதமெழுகுபறங்கண்டு பச்சைகற்பூரம் பாங்கானவயினுமுக்க கழஞ்சிட்டுவடியே. 1247

வடித்திடுவாய் விநாயகனேப் பூசைசெய்து வைத்திடுவாய்த்தெட்டமுகப்பா படித்தரமாசெய்து, கடித்தவாய்த்துடைத்தாப்போல்கலமுக்கன்று பத்தியத்தைதாகவண்டு கட்டித்தானியபுடமாக்கி, முடித்திதனே நைவேதனமும் செய்தபின்பு முறையாக நாலுநாட்கொருக் கால்முமொனறிலிட்டுக் கனிவாயக்காயரப்பு வெந்நீர்கொண்டு பருவமாய்மூடவேபத்து நாள் கழிந்தக்கேளே. 1248

பத்தியங்கள் பால்தயிர் மோர்புளி கசப்புமல்லால், பாராட்டுகைகையிலேயும் பச்சை மாங்கிஷங்கள் சத்தியமாய் விட்டுவிடு மறுநாளேக்காகும் சாத்துகிறேம் கோய்போகும் வயணத்தன்னே, முத்திய நீர்ப்பீனிசமோர் பீனிசஞ்சீழ் ரெத்தநம்நாங்கிவேர் சிராய்பருத்திவிரைபோலும் விழுதல் இத்தனேயோர் செம்பித்தசெங்கநோயு மிதிற்பிறந்தமேகமொடு யெல்லாம்போமே. 1249

விஷமுஷ்டித் தயிலம்.

போமப்பா வொருதலை நோய்க் கபலாவாய்வும் பித்தமிஞ்சிசிரநோ வுமண்டைவருகரப்பன், போமப்பா யித்தயிலத்தானே சொன்னேன் பொல்லாவிஷமுஷ்டித்தயிலஞ் சொல்வோம், போமப்பா சன்னிசயித் தியத்துடனே வாதமபுரிசத்திவாயு தோஷம் சதிமூர்சை, போமப்பா மதிமயக்முயலகன் முகவாதம் பிறவீச்சு முள்வீச்சுதனுவாத முடக்கம்போகுமப்பா குதிவாத சச்சைவாதம் போக்கில்லாதிமிர்வாதமெண் பதுவும்போமே. 1250

வாதமென்ற வெண்பதுக்குந் தயிலங்கூட்டு வகையிலுப்பைபுன்னையங்குமயில் வேம்பினோடு, நீதமுள்ள நல்லெண்ணை விளக்கெண்ணையல்லால் நினைவுடனே யயில்நோய்க்கு வயணங்கேளு, பாதமொசிறகுலர்த்தி வைத்திருந்ததெடுத்துப்பால் வெண்ணைதனில் நெருக்கிப்போட்டுக்காசு, ஈதன்றிமயில்கறியில் வெள்ளாட்டின் பாலிதிண்வெந்துப்புரை நீருத்திக்கடைந்திடாயே. 1251

கடைந்திட்ட வெண்ணைதனையுருக்கி நெய்கூட்டு கசடற்றமுசுறு முட்டைக்குஞ்சுகூட்டி, அடைந்திட்ட தொருபடியில் வெந்நீர்விட்டு அப்பனேபிழிந்திட்ட வஸ்துங்கூட்டு, குடைந்திட்ட பூநாகத்தயிலம் வாங்கி குறையாமலோர்படிதான் சலத்திற்போட்டு, உடைந்திட்டமண் மணக்கன் கக்கிப்பின்பு வோர்காலசத்தட்டு வட்டத்தோடு போடே.

ஓடுபோட்டது நடுவேதுவாரமிட்டு வோவியம்போர் சீலைமண்செய் யொருசாணுழம், போடுவட்டக்குழிக்குள்ளே சட்டிவைத்துப் பின்பு மந்தக்கலசத்தைக் கவிழ்த்துமூடி, நாடிசந்துவாயதர்குச் சீலைமண்ணு ஞ்செய்து காட்டெருவுங் காட்டெருவுமடுக்கித் தீயைமூட்டு, பாடில்லாதிறக்கிவிடுத் தயிலங்கண்டாய் பாங்காகவகைக்கொன்றுக் கரைப்படியும் பதியே. 1253

பதியான கொடிக்கள்ளி யொருக்குதிரக்கள்ளி பரிவான யிலைக்கள்ளி திருகுகள்ளிப்பாலும், பதிவானதிவ்விவைகள் வாட்டியே பிழியும்படிவகைக்கு மறையந்தப்பால்களு மவ்வண்ணம், பதிவானகுழலா தண்டையிலைச்சான்ம் பாச்சடா அவ்வண்ணம்பருந்தாழி யொன்றில், பதியான யிந்தவகைச் சாறம்பாலெண்ணை பதமுமல் கலந்துவிடுபலசரக்குக்கூட்டே. 1254

பலசரக்குப் பெருங்காயம் வசம்பு மாமஞ்சள் பட்டாணசதகுப்பை சன்னிநாயகமும், விலையதிகங் கஸ்தூரி சீரகங்கள்மூன்றும் வீரேமம்பூநாக மயிலெச்சம் விரைந்து, மலையாமல் வகையொன்று கழஞ்சியாறு மறுபடிநீ வெள்ளிப்பருப்பு மஞ்சபலந்தா, னிலையாகச்சாறுகொண்டு யிவைகளாட்டி நேயமுடன் தீமூட்டி யெறிக்கிடாயே. 1255

எரித்திட்டுப் பதத்திலே வடித்துக்கொண்டு என்மக்காள் கணேசனுட பூசைசெய்து, அரித்திட்ட தயிலத்தைப் பதனஞ்செய்து அப்பனே வியாதிகண்டு தொட்டுப்போடு, விரித்திட்ட சன்னிமுதல்தோஷம்போகும் மேலான வாதவகையென்பதோடுங், தெரித்திட்ட செவி நாசி நசியஞ் செய்யுந் தீருதற்கு உள்ளுக்கோர் காசு சூட்டே. 1256

சூட்டக்கேள் குளிர்நளிர் விஷதோஷ சுரத்தைச் சொல்லுகிறேமுள்வேர்க்குந் தாகமாகும், சூட்டக்கேளிப்பசைந்து தலையுநோகும் சூடெழும்பிக் குளிர்ந்தபின்பு குளிர்சுரமுண்டாகும், சூட்டக்கேள் வாந்தியொடு மலசலமுங்கட்டும் துயரமாய் நாவரண்டு சோகமாகும் சூட்டக்கேள் சதியுண்டார் கியாழந்தன்னைச் சூட்டுகிறேன் வகைகேளுஞ் சிந்திகூட்டே. 1257

சிந்திமுத்தக்காசு பற்பாடகத்தோடு சிறந்தகொடிதூவி வெட்டியிலாமிச்சம்வேர், ஆர்ந்தகொத்தமல்லிசுக்கு நிலவேம்போடு அதுவகைக்கு யிருகழஞ்சி யளவாய் கூட்டுப், பாந்தமற விடித்துமுக்கூறு செய்பண்புடனே யொருகூறக் கிருநாழி நீர்தான், சாந்தகமாய்விட்டு யெட்டொன்றாக காச்சிதானருந்து தேன்கலந்து யிருபோதிப்படியே. 1258

இப்படியே மூன்றுதினங் கொண்டாயாகி லெடுத்தசுரம் குளிர்நடுக்கு விஷபாகம் போகும், வெப்படாதிருத்திவிடும் வாய்நீர் போகும் மெய்நீரும் வாந்தியும்போம் வீறும்போக்கும், தப்பாதசையுடனே புளிப்பு மோறுந்தள்ளிவிடு ஆறுதினந்தாண்டு மப்படியே, கொண்டுநின்ற பேருக்கெல்லாமழிசுரமு பாறலுட னுறைகின்றோமே. 1259

அறைகிறேன் பித்தவெட்டை காசற்கூறு மதிற்பிறந்தபலரோம சதிவாந்தி, மறையாத பெருமேகமிருமலினை மதிமயக்கங் காந்தலும் மெரிவுதாகம், முறையான செஞ்சறிப்பு வயிற்றிரைச்சலுஷ்ணம் கால் கைகள் காந்தல்போக, வெருகெய்யைச் சொல்லக்கேளு நிமிஷத்தில் நிற்பதற்குத் தோன்றுமவித்தே 1260

வேறு-தேற்றங்கொட்டை நெய்.

தேத்தாம் விரைகால்படித் தன்னைத் தேய்த்துக்கழுவி யுலரவைத்து, நேத்திப் பசுவின்பாலதனில் நினைக்கமூன்றுதினமூறப், பார்த்

துவதனை யிருகூராய் வெட்டிப்பால் விட்டாடியபின், சேர்த்துத் திர
ட்டியதனளவு பசுவின்பொன் சேர்த்திடுமே. 1261

சேர்ந்தபின்பு நெய்சட்டி யிதனிற்போட்டு அடுப்பேற்றி, பேர்த்
திடாதேதீமூட்டி யெரிக்கிற் கடுகு பொன்னிறமாங், கூற்றுப்பார்த்துக்
கடைமறந்து கூறக்கேள்சீரகமேல, மேத்தவதுதானிருகளஞ்சு மின்ன
மியம்பவகை கேளீர். 1262

கேளு சாதிக்காய்பத்ரி கிராம்பு சிறுநாகப்பூவும், நீளுதாளிசபத்
திரி மதீதியுடையவதிமதுரம், வாளுங்கருஞ்சீரகமேல மிலவங்கப்பட்
டைசதகுப்பை, மீளும்திரிகடுகுடனஞ்சு விராகனிடைகூட்டிடுமே. 1263

கூட்டுமீரேழ்மருந்துக்குங் குறுக்கக்கருக்கி நிழலுலர்த்தி, நாட்
டமுடனே விடித்துப், பொடியாக்கியதையும் வடிகட்டி வாட்டமில்லா
நெய்சட்டில் மகிழ்ந்தேநெய்யில், பொடிகளுடன் சூட்டாய் மூன்று
பலஞ்சீனிகலந்து பொடிபோய் தூவிடுமே. 1264

தூவிக்கிண்டி வெதுப்புடனே துணிவாயிறக்கிவண்திகட்டிஆவிக்
கேற்ற தினம்பார்த்து அப்பா, கொட்டைபாக்களவுமேவி யிருபோ
தெண்ணஞ்சு தினமும் விளம்பிக், கோள்வீரால் போமித்திருந்த பித்த
வெட்டை கும்பிட்டோடுங் கண்டாயே. 1265

கண்டாயத்திசுர வெட்டை கால்கையெருப்புக் காந்தலொடுபெண்
டே யெழுந்தசூடு, முதற்பணைத்த விருமல்புகைச்ச லொடு துண்டாய்
வந்தகூஷயரோகங் தொட்ட, வியாதியத்தனையும் வண்டார்குழலாய்,
பயந்தோடும் வச்சிரதேகமாக்கிடுமே. 1266

வேறு.

ஆய்க்கிய மிந்தநெய்க்கும் மசடில்லைச் சத்தியங்கள் நீக்கிடு புளி
கசப்பு நிறுத்தினல் மெத்தநன்று, போக்கிலே கொள்வீராகில் பொறுப்
பது வெகுநாள் செல்லும், சீக்கிரம் நிவர்த்தியாகச் செய்தகாந்தலெரி
வைக்கேளே. 1267

வேறு.

காந்தலெறிவா யெடுத்ததற்குக் கியாழமொன்று கழறுகிறேன்,
சேர்ந்த மிளகு மதுகம்வேர் சீராய்ச்சமனய் தாக்கியதைப், பாந்தமாக
நீரோர்படிவிட்டே யெட்டொன்றாக்கியபின், வார்ந்து வடித்த வெண்
ணெயிட்டு மாய்க்கொள்ள வாங்கிடுமே. 1268

வேறு.

வாங்கிட யின்னமொன்று வருகிறேன் கியாழந்தன்னைப், பாரங்கள் பத்தியான பேர்க்கெல்லாம் பலிக்குமப்பா, தீங்குடன் மாதர்க்குந் தர்க்காகச் செய்திறமாகாது, சாங்கமாய் செய்வதெல்லாம் தவமுள தேகத்தோர்க்கே. 1269

வேறு.

தேகங்காந்தல் நெஞ்சரித்தல் தீராக்கியாழம் செப்பக்கேள், வேகமுடைய மிளகுவல்ல வேரினை வைபிரமிழைத்ததுவும், பாகஞ்சமனாய் தாக்குரெட்டிப்பாங்காய் கொத்தமல்லியிடு ஏகமாகவிருநாழி நீரிலெட்டெட்டொன்றாக்கே. 1270

வேறு

ஆக்கியகியாழந்தன்னை யந்திசந்திக்குவைத்து, நீக்கிடுபாதிதன்னை நிவேடிகட்டிபின்பு, தாக்கிட இலைபால்பாதி சரித்து தளிச்சிரகம், வாத்குடன் வசிக்கநீயும் வறுத்ததை பொடிசெய்வாயே. 1271

பொடிவடி கொண்டுரெண்டு பணிவிடை பொடிமேல் போட்டுக், குடியிது மூன்றுபோதில் குணங்காந்த லெரிவுகிற்கும். அடியுடனழல் நீர்விட்டுச் சொஸ்தமாயிருக்கசெய்யும், படியுள்ளோர் தமக்குபித்தம் பணைத்தது வாங்கிகேளே. 1272

வேறு.

வாங்கியரோசி பித்தமதில் வாய்நீரூரல் நெஞ்செரிப்புச், சாங்கியாக் கியாழமொன்று சாற்றக்கேளு தணிவதற்குப், பாங்தமாய் வில்வேரிழைத்துப் பகருங் கொத்தமல்லி, நேர்ந்த நெல்லுப்பொரி மதுரம் நெல்லியுடன் முந்திரிப்பழமு, மார்ந்த சீனிகற்கண்டு மடைவால்வோர் கழஞ்சொன்றே. 1273

வச்சிரவல்லிசூரணம்.

ஒன்றாய்நறுக்கிப் பிடியொன்றி லொடுக்கி யெட்டொன்றாக்கியதை அன்றாட மூன்றுதின மந்திசந்தி கொள்வீரால், சென்றுரென்றே விட்டகன்று திருப்பிப்பாரா தொளித்தோடு, மென்றேகியாழ மொழிப்படியே மிணங்கச்செய்வீ ரியல்பாமே. 1274

இயல்பாம் வச்சிரவல்லியென்ற திருகாணினிய சூரணங்கள், மயலாகாத சதுரப்பிரண்டை மணிமுந்தின துசமூலமெல்லா, மொயிலாம் வில்லைபோல் நொறுக்கி யூறலில் துவத்து வுலரவைத்துப், பயிலாயிடித் ததுனை வடிபருவத்துடனே வைத்திடுமே. 1275

வைத்தபின்பு மேல்மருந்து வகையைகேளு, திரிகடுகு ஏத்ததிரி மால் கல்லுப்பு, மிசைந்த செவ்வியஞ் சிற்றரத்தை மொத்தாரேலமில வுங்க, முதிர்ந்த கெந்தத்திப்பிலிமூலம் சித்தாரென்று சீரகமுஞ் சீன முட்டனக்கிறுகாரம். 1276

காரமானயிந்துப்பு கிரும்பு சாதிக்காய்கத்திரி, வீரமுடையவமுக் கிருவும் வகைக்குநாற்கழஞ்சு, சாரமுடையசடுகுரோணிகனியும்வெண் காரம், பேராம் வகைக்குமிருகழஞ்சுயொடு நவாச்சாரங் கல்மதமே.

வே று.

கல்மதம்சாரம் ரெண்டு வகைக்கொரு கழஞ்சுகூட்டு பலவித மருந்துகழஞ்சி பார்த்துவகையதனில் பாதி வெல்வது வச்சிரவல்லி பொடிசேரவ்வண்ணஞ்சீனி, செல்வது மூன்றுமொன்றுப் திரட்டு சூரணந்தான் திண்ணே. 1277

திண்ணடா வத்திசந்தி வெருகடிதேனிலேதான் பண்ணடாகுன் மவாய்வுப் பித்தமுந்தீரும் பிண்டாக பாலவாயுவுடனே வெண்கோழை தானும் விண்ணடா காசுக்கூறு வெகுண்டுவிட்டோடும் பித்தம். 1278

பித்தமா முஷ்ணரோகம் வெருகிய வெட்டைக்கெல்லாம் தித்தி யாம் யெண்ணெநெய்பால் மோர்தனைச் செலுத்துவீரால், வெத்தியாம் நிவர்த்தியாகும் வேறொன்று மில்லையப்பா சத்தியம் புளிகசப்பு தள் ளடா சுகமதாமே. 1279

தமனகாதேசுரநெய்.

சுகமதாமனபா மீசாசூரணத்தைச் சொல்வோம் ஜெகம்புகழ மிக் தசர்க்கரை சீர்பத்துக்கழஞ்சிகூட்டி இகமபரவமுக்கிராதே ரெழில்கண் டங்காரி தூதி திகையவே முத்தக்காசு நிலப்பனைபகர்ந்திட்டாரே.1280

பகர்ந்தது வில்வவேரும் பாதிரிப் பொன்னாங்காணி, சுகந்தருநகரி நத்தச்சூரிவேர் சிறுநெருஞ்சி, யுகந்தகீழ்க்காய் நெல்லியொடு சிறுகீரை வேரும், புகழ்ந்தமாதுளம்வேர் வெட்டி விலாமிச்சம்வேரும் போடே.

போடம்மான் பச்சரிசிழுவேரும் பெரிய ஆவரைவேர்ப்பட்டை, பதடியவத்திபட்டை சிறந்தகோரக்கர்மூலி, கூடியவித்துச் சாதிக்காய் பத்திரி கூகைநீரும், பாடில சிறும்புமேல் மூந்திரிபழங்கற்கண்டே.

கண்ட சித்திரத்தைக் கல்நார் கல்மதங் கொத்தமல்லி, விண்டதா ளிச பத்திரி மிளகு திப்பிலிசுக்கோடு, பண்டதிமதுரமொன்று பகர்ந் தனர் கழஞ்சிமூன்று, வண்டலார் குழலாய் மற்றவகை யினிதுரைக்க லுற்றோம். 1283

உற்ற சீரகந்தான் ரெண்டு குராசானி ஓமம்கெல்லி, சிற்றிலவுங்கம் பத்திரி சிறுநாகப்பூவதல்லால், கோலறவதேவதாரம் விளாவாடுகோஷ் டந்தக்லோலம், முற்று கஸ்தூரிமஞ்சள் கெந்தத்திப்பிலியின்மூலம்.

மூலம்வால்மிளகு தெசாபுரத்தோடு செகச் சோலஞ் சீலமாமன்ன பேதி சிறந்தமாது அளத்திஞேடு, கோலமாமக்கிருகாரங் கூறியவாய் விளங்கம், வால்கோடு மகரம்பூவும் வகைகிருகழஞ்சு தாமே. 1285

ஆமொரு கழஞ்சுவிதம்விட் டுங்குமப்பூவல்லால், கோவெருது டைய கோரோசினேயோடு கூறினேம்பின், நாமநாறுங்கஸ்தூரி நல்ல நெற்பொரியுங் கூட்டிப், பூமிஙாடன்பருத்திப் பருப்பொடு தழஞ்சி பொடியே. 1286

பொடிசெய்வ தெட்டெட்டுக்கும் போற்றநாற்றெழுபத்தெட்டு, வெடிவெயிற் காயவைத்து மெல்லிதாயிடித்துச்சோம்பாய், வடிசெய்து யிதிற்பாதிதான்; வங்காளாச்சீனிபோட்டு, படியவே புதுப்பாண்டத் திற் பதனஞ்செய் பண்பாய்தேனே. 1287

தானென்ற மேகவட்டை தனித்தாது காட்டமாஞல், தேனென் றுநெய்பால் மாதுளம்பழச்சாற்றில் தின்னப், போனவீரியவிருத்திப் புருடர்க்குப் பொங்கிவாழும், ஞானதேசிகன்போற்காயஞ் சுப்பிரமாக நண்ணும். 1288

நண்ணுவீர் நாற்பத்தெட்டுநாள் பாதியருந்துவீரால், புண்ணிய புருடஞவான் பூமகள் விரும்பிவாழ்வாள், திண்ணமாய்ப்பலனுண்டா குந் தினந்தோறும் பால்கொள்வீர், ல்ண்ணலாருளினுலே யடிந்து செய்யதினலாமே. 1289

அறிந்துசெய் வாதசீதவனுகிடிவிஞ்சிச்சாற்றில், செறிந்திடுவெரு கடிநீ தின்றுவாபத்துப்போது, பிறித்திடுவ் குடைச்சல்நீங்கிப் பின் னியமுடக்குந்தீரும், முறிந்திடா தனுபானத்தில் மூத்துநீபருந்து வாயே. 1290

அருந்தியநாள் மட்டுக்கு மப்புரம் விடுதிவிட்டால், திருந்தியேவாத சீயும் பித்தங்கள் சேரொட்டாது, பொருந்திடு பிணிகட்கெல்லாம் புகலிடங் கெதிகெட்டோடும், வருந்தியேயுண்ணவாந்தி மலப்பந்த வாய்வு போமே. 1291

வாய்வோடு மூந்நூற்றுறும் வாதங்களென்பத்தெட்டும், பரக்கி ன்ற குன்மமெட்டும் பலமேக மிருபத்தொன்றும், நோய்மூலகிருணி பாண்டு விஷபாகம் நொறுக்கும் பின்னும், சீயாத்தங் குளிர்சுரங்கள் தீரும் நோய்கிருமூலமே. 1292

வேறு-அதிவிடயசூரணம்.

மூலக்கிருணிக் கதிவிடைய முகில்சூரணத்தின்வகைகேளாய் சீவி த்திடையம்பெருங் காயம் சிறுநாகப்பூ திப்பிலியுஞ் சாலநிறைந்த சாதி பலதிரி சமன் மூக்கழஞ்சு சாதிக்காய், ஆலசூட்சமைங்கழஞ்சிதூய திப்பிலி நாற்கழஞ்சே. 1293

கழஞ்செட்டு வேர்க்கொம்பு கடுகுவெள்ளியப்படியே கழஞ்சிதத் து நாய்கடுகு கருத்தாய்ப் போங்களங்கமற, கழஞ்சிபத்துத்திப் பிலியு மூலமொடு கட்டாகவிரு, கழஞ்சியபின்னுங் கூட்டிடுவாய் கனிவாய் வெதுப்பித் தூளாட்டே. 1294

அட்டியதற்கு ளஞ்சுபலம் சீனிகழந்து புதுக்கக்கத், தாட்டியது தான் சூரணத்தையப்பா வந்திசந்தியோடு ஆட்டியதுவும் வெருகடி தானருந்த வனுபானத்தின்வகை, ஆட்டிமுத்தக்கியாழத்திலுமருந்தே னிஞ்சிச்சாறுமே. 1295

ஆமே கிருணியாறுவகை யசடுதீரு மனுபானம், ஆமே சுக்குகடு கெள்ளு அப்பாதிப்பிலிசமனுக, ஆமே வெதுப்பித் தூளாட்டியதிலே பாதி சூரணமும். 1296

ஒழித்ததற்கு யின்னமொன்று வூட்டவகைகேள் பெருந்துமடை வழிபாகெச்சில் கருவேம்பினீர்க்கில் முருங்கை யீர்க்கிலேயோடு, நெழி யாய் கொழுஞ்சிகாரணை வேர்நிதி முத்தக்காசு சுக்கு வெழியாய் நல்ல மலைதாங்கி வேருஞ் சமனுயிடித்திடுமே. 1297

இடித்ததை முக்கூறிட்டு யியலொரு கூறுக்குத்தான் படிந்தாமா கவப்பாச் சிருநாழிநினக், குடிப்பதற் கெட்டொன்றுக்கிக் கொல்வது க்கொன்றுகேளும் முடிப்பது கிழிமகுத்து மிளகுதிப்பிலியுஞ்ல்க்கே.

சுக்குவெள்ளுள்ளியோமம் சூட்டதிவிடைவசம்பு திக்கிலாரெண் டோடேத்தித் தாழ்வில்லாக்கிழியுககட்டி, பக்குவத்துடன் தானந்தக் கியாழத்திற்பாச்சிபின்பு தொக்கடா வந்திசந்தி துணிந்துதானணிந்து கொள்ளே. 1299

வேறு.

கொள்ளவே மூன்றுதினத்துடனே மூலங் கூட்டோடேவிழுந்து போங்குறைதானில்லை, விள்ளுறேனின்னமொரு கியாழந்தன்னைவேப் பீர்க்கில் கருவேம்தனீர்க்கில் சுக்கு, விள்ளும்றன் வெள்ளுள்ளி திப் பிலினேடு விராகந்தான்ன்மருந்து வகைக்கு மூன்று, உள்ளுவேனுள் ளிதாய் கிழிப்போல் கட்டியொருநாளை கிருநாழி நீரையூட்டே. 1300

ஊட்டியதை யெட்டொன்றாக் குறுக்கிப்பொட்டணத்தை, யொருநாளேக்கிருபோது அரைத்தரைதையுங்கலக்கி யூட்டியதில் மூன்றுதினம் மூலப்பேரோடுமோடுங் காணின்னமொரு கியாழங்கேளு, ஊட்டியதில் வெள்ளுள்ளி கரும்வேம்பினீர்க்கு வோகோசக்கு. 1301

வேம்பீர்க்கில் திப்பிலியு, மூட்டியதா தமனுகத்தட்டியே கியாழ மொப்பாகச் சலமிரண்டு படிதான்சேரே. 1302

சேரடாயிப்படியே மூன்றுநாளப்பா தினந்தோறு மெட்டொன் றாய்குறுக்கிவாங்கி, வாரடா விருபோது மருந்திணுக்கால் மாசக்கலமூலம்வேர் மடிந்துபோகும், பாரடாபத்தியங்கள் புளிகசப்புமாற்று, ஆச்சரியங்கியாழங்களோடவில்லை, பாரடா வேணதுண்டு சுருக்கிச்சொன் னேம் பண்பானசிவதை சூரணந்தான்பாரே. 1303

சிவதைசூரணம்.

பாரப்பாசிவதை சூரணத்தைத்தானும் பாடினேம் சிவதைபொருபலந்தான் கூட்டு, பாரப்பா திரிபலையுங் கொத்தமல்லி ரோணிபகர் தெசாபுரமிந்து செவ்விய முத்தக்காசு, பாரப்பர திரிகடுகு சீரகங்கள் ரெண்டும் பண்பாகச் சிறாகப்பூ வன்னபேதி, பாரப்பா விலாமிச்சு வகைக்கு முக்கழஞ்சு பழந்தேவதாரமிலவுங்க பத்திரியே. 1304

பத்திரியுங் கோஷ்டமொடு நல்லகெந்தம் பரிவானபொரிகாரங்கஸ் தூரிமஞ்சள், முத்திரிகாசட மாஞ்சிவாய் விளங்க முறையாக வகைக் கொன்றுக்கொன்ரையாங் கழஞ்சு, இத்தனையாநாலேழுமருந்துலர்த்தி யிடித்து யென்தகனே வடிகட்டி சீனியந்திடைக்கு, அத்தனையுமொன் றாய்கலந்து சூரணித்து அருந்துவாய் வெருகடிதானபானவாயுவுக்கே.

வாயுவென்னப்பட்டத்துக்குத் தேனிஞ்சிச்சாற்றில் வளமாகயொருபோது கொள்ளத்தீரும், தேயமுதல்கலக்கியது பழமலம்நீர்க்கட்டுந் திறந்துவிடுமெல்லாது தேகசௌஸ்தமுண்டாம், கேயமுள்ள பேர்க்காகு மலக்கட்டில்லை நினைவுகெட்ட மாந்தருக்குச் செய்யவேண்டாம், மாயமுள்ளமருந்தெல்லா மடக்கம் விட்டுச்சொன்னே மப்பனே வொப்பில் லையனேக நோய்பறக்கும்பாரே. 1306

வேறு.

பறந்திடும் பத்துநாட்குள் பழமலங்கறியும் வாய்வு, மிறந்திடுமூஷ்ணம்போக்கு மிருமலுமீளேகீங்கும், சிறந்திடுதினவும் வாங்கும் நிரைந்ததையுண்வேந்தால் நீள்பிணியண்டொட்டாதே. 1307

வே று.

ஓட்டாதசளையோடிருமல் விக்கலோடிடவே திப்பிலி வெந்தயம் நெல்லிப்பருப்பு, சட்டாத சிற்றரத்தை நெற்பொரிசர்க்கரையுஞ் சமனு கவகையொன்று கழஞ்சியாறு, முட்டாகக் காயவைத்துத் தூளாயாட் டிமுறையோடே வடிகட்டிக்கொண்டு நெய்யில் விரவிகட்டாச, வந்தி சந்தி கொட்டைப் பாக்களவு கட்டங் கழறத்தின்று வரில் கள்ளம் போமே. 1307

கள்ளம்போம் களகளத்தயிருமலிளை கபங்களொடுகெயக்கூறுவிக்க ல்போகும், கள்ளம்போமின்ன மொன்று விக்கலுக்கு சனித்ததொரு விளாம் பழத்தின் விரையைப்போக்கி, கள்ளமிலாமூலைப்பாலில்சாரித்த ப்பால்கடிய நல்லதிப்பிலியை வறுத்துக்கொண்டு, கள்ளமறத்தூளாக்கி வடித்துயிந்து ஆல்கழஞ்சு மருக்கிருவேர் சுட்டாரியே. 1308

கரியானதிவையொக்க வொன்றுகச்சேர்த்து கறந்தகொம்பில் தே னிலேகலந்து கொண்டு, விரிவானயந்திசந்தி கொள்ளக்கொள்ள விக்க லெல்லாம் பறந்தோடுமிளைப்பமிளை, பிரிவானவிருமலொடு வரட்சிதா கம் பேரானதோஷமுதல் பிரிந்துபோகும், தெரியாத வகையெல்லாம் சொல்லிவிட்டோம் சிறந்தமாகவில்வாதி லேகியமாகிலத்தே 1309

மகாவில்வாதிலேக்கியம்,

மானிலத்தில் வில்வாதி லேகியத்தை வகையாகச் சொல்லுகிறோம் வரிசையாகக், கானகத்தில்லாத வில்வவேர்தான் கனத்தபிரயோகத்து க்கஞ்சுதுலாம் கொறுக்கித், தாமென்றபாண்டத்தி லஞ்சுகலநீரும்சா தகமாயடுப்பேற்றி யெட்டொன்றுக்கிக், கோனென்ற வகடிட்டிதாழி சேர்த்து கூறுகவஞ்சுதுலாம் பொடியைப்போடே. 1310

போட்டபின்பு சர்க்கரைதா னுருகிற்றுனல் பிறகுமதை வடிகட்டி த்தாழிசேர்த்து, நாட்ட முடனிஞ்சிச்சார் நெல்லிச்சாறும் நலமாகவ ைக்குமொரு தூணிசேர்த்து, வீட்டிமை யில்லாத கடைமருந்தைச் சொல்வோம் வெதுப்பான வெய்யிலிலே காயவைத்துத் தீட்டாதனை மிளகுப் பொடியு மொருகுறுணி திப்பிலியுஞ்செவ்வியமொடு தூளாறு படியே. 1311

படியல்லால் பலமாகச் சுக்குப்பத்தஞ் சுபலமோடு யேலமிலவுங் கஞ் சிறுநாகம் கொடியதாளிசபத்திரி சிற்றரத்தை மதுராங்கோட்ட மொடுபேராத்தை யக்கிருகாரம், அடியாகவகை யொன்று பலந்தா

னஞ்சு சொன்னதின்பின் சாதிக்காய் பத்திரிகிரும்பு, பொடியாகவகை யொன்றுக் கிரஞ்சுபலந்தான் பொடியாக்கி மருந்தெல்லாம் வடிகட்டிப் போடே. 1312

வடிகட்டிப் பொடியெல்லாம் கூட்டச்சேர்த்து வளம்பெறக்கியா மூமொடுபொருசாறல்லால், நெடியதொரு கருப்பம்பால் கொம்மட்டி மாதளையாம் நேத்திபெறுபழச்சாறு வகைக்கு மஞ்சுபடிதான் முடிவாக முன்சாறும் கூடக்கூட்டி முறையோடே வடுப்பேற்றிப் பாகு காச்சி, அடிமுடியாயிருக்கின்ற கணேசனைப்பூசித்து அக்குழப்பு பாக்கிலேமருந்து லமமைத்திடுமே. 1313

மருந்தான பொடிப்பாகில் தூவித்தூவி வளமாகக் கைவிடாக்கிண்டிகிண்டி, பொருந்தவேகிளறியபின் நெய்படிரண்டரையும் பொலிவுடனே விட்டிளக்கித் தேனும்வண்ணம், திருந்தவே விட்டிளக்கி லேகியமாக் கண்டாய் தின்னவேயிருபோது கொட்டைப்பாக்களவும் அருந்தவது மண்டலந்தா னணுகாது நோய்களசடில்லை நோய்க்குமார் பாணியெனலாமே. 1314

ஆமப்பா தீராதநோயுங்கேட்கு மதினாலே யொழிகின்றவியாதி கேளு, வேமப்பா குன்மமுதற் குஷ்டம்போகும் வெட்டைபோம் சதியோடே ரோசியும்போம், போமப்பா க்ஷயகாசமிருமலீளை புகைச்சலொடு நெஞ்சரிப்பு பித்தசோகை, ஈமப்பா காமாலை தொந்திப்போடு நலங்கொடுக்கு மதிசாரம் நாடாதோடும். 1315

ஓடுகிறவயிறிரைச்சல் ரத்தக்கடுப்பு மூளமாந்தை தலைநோயு சுரமாந்தைதீரும், சாடுகின்ற வெரிவு காந்தல்தீரும் தாகம்போம் நீரேற்றமுப்பிசமுந்தீரும், வாடாத புலத்தியனே ஞானசீலா வளமான சிவயோகி மச்சகேந்திரா, நாடுகின்ற நோயெல்லாம் விட்டோடிப் போம் நல்ல பிரயோகமடா பத்தியமும் நலமே. 1316

பத்திய முப்புநெய்பால் துவரை பருப்பாம் பழுதகற்றும் வழுதலங்காய் முருங்கைப்பிஞ்சாகும், சத்தியெனுமூளைத்தண்டு மவரைப்பிஞ்சாந் தனிநெல்லியண்டமொடுவிரால் தேளிசுறுமீன், வெகுதிபுரி வெள்ளாட்டு காடைமுசலுடுதி மீன்வகைகளிது வெல்லாமுலர்த்தியே கூட்டு, மத்தியிலே விடாமல் நீமண்டலந்தான் கொண்டால மகாநோயுந் திருமந்த மகிமை நீயறியே. 1317

வில்வாதிலேகியம்.

மகிமைக்கு வில்வாதி லேகியத்தை வகையாகச்சொல்லுகிறேன் மைந்தாகேளு, மகிமையுள்ள வில்வரோக முசுபலந்தான் வாகாகநொ றுக்கியேயிருதூணிநீரில், மகிமையுள்ள பாண்டத்திலிட்டுத் தீமூட்டி வளம்பெறவே காலொன்றாய்க் குறுக்கிவடிகட்டி, மகிமையுள்ள சர்க் கரைதாநீயாறு பலத்தை வற்றிநின்ற கியாழத்தில் மாட்டுவாயே. 1318

மாட்டுவாய் போட்டதிலே தகர்ந்துக்காச்சி வற்றியதுகுழம்பா கிப் பாகாய்நிற்கு, மாட்டுவாய் மிளகுபொடி செவ்வியந் திப்பிலியும் வளமான மகாராஜ யோகதீரா, மாட்டுவாய் மலமச்ச கெந்திபுத்ரா வகையொன்று படிகாலாய் வகுக்கக்கேளு, மாட்டுவா யேலமிலவங்க மிஞ்சி மகத்தான சுறுநாகம் தாளிசபத்திரியே 1319

பத்திரியோடிவைக் கெல்லாம் வகைக்கொரு பலந்தான் பகர்ஜாதி பத்திரி கிராம்பு பலமரையா, மித்தனையுங் காயவைத்து தூளாயாட்டி யியல்பான சாறுபாகிதுபருவங் குழம்பாய், வந்திவரும்சந்திலேகடை மருந்துதூளை வடிகட்டிதூவியதை வாகுடனேகிளறு, வெத்தியாய் லேகியமாமதிலேநெய்தேன்விட்டு ஆழாக்குவிரவியதைகிண்டே. 1320

கிண்டியது லேகியந்தானுண்ணக்கேளு கேடில்லை கொட்டைப் பாக்களவு அந்திசந்தி, கிண்டியலேகிய மருந்தவாயுற்று வலிகுன்மம் கிண்கிணித்த விருமலோடிளைகாசம், கிண்டிய லேகியத்தினு நெஞ்செரி ப்புவாய்வு கிராணியதிசாரமொடு பித்தகாமாலை, கிண்டியலேகியத்தி னால் தேககாந்தல் கிளாதாகஞ் சோபமொடு வாதந் தொந்திப்போ.

தொந்தித்த பலரோக முஷ்ணரோகம் சோகமொடு விஷபாண்டு சுரங்களுக்குப்பிசங்கள், தொந்தித்தவயிறுளைச்சல்தோஷம் வாந்திதொ டர்ச்சியாய்வரு மிரத்தபித்தரோகந், தொந்தித்தநீரேற்றம் வீக்கமலக் கட்டு தொலையாத தலைவலி அயரந்தீரும், தொந்திப்பாய் லேகியந்தான் மண்டலந்தான்கொள்ளு சூட்டுறேன்குண்டலாதி லேகியந்தானே.

வேறு-குண்டலாதிலேகியம்.

குண்டலாதி லேகியத்தைக் கூறக்கேளு குவலயத்தில் மண்டுசங் கம்வேர் நூறுபலமும், செவியமதிற்பாதி கண்டங்கத்திரியுமவ்வண்ணங் கடுந்திப்பிலிமூலம், பண்டமுத்தக்காசு வில்வம் சித்திரமூலம் பகர்ந் தோமே. 13_3

பகர்ந்தோம் சிந்திகிலைப் பனைவேர் பலனும் வெட்டி விலாமிச்சு, பகர்ந்தோர் சிற்றாமுட்டிக் கொட்டிச் கிழங்கு மமுக்கிறுவேர், பகர்ந் தோம் வகைக்கு நாலஞ்சு பலமுங்கூட்டி யிடித்ததூள், பகர்ந்தோம் பாண்டந்தனிற்பத்து மரக்கால் பாணிசேர்ந்திடுமே. 1324

பாணிசேர்த்துத் தீமூட்டிப் பருவத்துடனே யெட்டொன்றாய்ப் பாணிகுறுக்கிக்கற்கவகை பகர்வோந் திப்பிலி பலமிரண்டு, பாணிக்கி சையகூகை நீறுபலந்தானுது நாகப்பூ, பாணிக்கிசைய சிரகங்களிரண்டு பலமும் வகைமூன்றே. 1325

நான்றாமேல மிலவங்க முத்தக்காசு சிறுதேக்கு, மூன்றாங்கற்கட கசிங்கியொடு மூலம்சாத்திப் பெருங்காயம், மூன்றும்வகைக்கிரண்டு பல மிளகு பொடிதானரைப்படியே, மூன்றுஞ்சுக்கும் பொடியரையா முழுதுமிடித்துத் தூள்வடியே. 1326

வடித்ததூளொன்றாக்கிவைத்த கியாழங் குழம்பதிலேகடித்தாப் போலே, பொடிதூவிக் கிளரகிண்டி வற்றவைச்சு பிடித்தபிடியாய், நறு நெய்யோர் படியும்விட்டுக் கிண்டியபின், தடித்தநறுந்தேன் படியொ ன்று தான்விட்டிளக்கியமே. 1327

லேகியமோர் புதுக்காகத்திட்டுவைத்து என்மகனே வியாதி கண்டு அந்திசந்தி, லேகியமோர் மண்டலந்தானுண்ணுவுண்ணு மியல் பான வியாதிபோம் வகையைக்கேளு, லேகியந்தான் சிலேற்பனங்க ளெல்லாந்தீரு மிடர்படுத்தும் வாயுவென்ற தெல்லாந்தீரும், லேகியத் தாலிருமல்போம் குண்டவாய்வு மெட்டுவகைக்குன்மங்கள் பலவுந் தீரும். 1328

தீராதவிக்கலொடு மவங்காரங்கள் திலமான பீனிசங்களுதரவே தனைகள், தீராதசுரதோஷஞ் சன்னியோடு தேகத்தி லேங்கல்குத்து குடைவுளைச்சல்தீருந், தீராதவுப்பிசங்கள் நீரேற்றம் வீக்கஞ் செய்யா மலக்கினியின் மந்தஞ் சீதபித்தம், தீராதனெஞ்செரிப்பு வாத்திகூடு தெளியாத பலரோவுந் தெளியுந்தானே. 1329

தெளியாத ரோகங்கள் பலவுந்தீரும் செப்பினேன் பத்தியத்தை திறமாய்கேளு, தெளியாத புளிகசப்பு புகையிலைமாங்கிஷங்கள் சிரான கடல்சம்பைப்பாகல் பூசினிக்காய், தெளியாது பாவக்காய்ப் புன்சுரை சோம்பு தீண்டாதே விலக்கிவிடும் சேர்த்தகுந்தக்கேளு, தெளிவான நெய்பாலு மிளகுமுப்பு செங்கீரைமுளைத்தண்டு வழுதலையுமாமே

ஆமப்பா கொடுப்பையோடே பிஞ்சு மப்பனே வெள்ளாட்டுக் கண்டமாகும், ஆமப்பா கடல்சம்பை தேனுமாகு மங்கோரங்குளச்சம்பை யுலர்ந்ததாகும், ஆமப்பா முருக்கையிலே பிஞ்சுமாகு மரைக்கீரை தழையுறுத்துத் தளர்ந்ததாகும், ஆமப்பா பசுவின்மோர் புளியதாகு மாச்ச பயஞ்சுவாச குடோரி சூரணத்தைக்கேளே. 1331

சுவாசகுடோரி சூரணம்.

சூரணமாஞ் சுவாசமென்ற குடோரிதன்னைச் சூட்டுகிறேன் திரிகடுகு சிற்றரத்தை, சூரணமாம் வக்ராகாரம் வால்மிளகு சொல்லரிய தேசாபுரம் பொரிகாரஞ்சமனும், சூரணமாந் தாளிசபத்திரி ரெட்டி கூட்டி சூரியபுடத்தினிலுலர்த்தி தூளாயாட்டி, சூரணமாய் கடிகட்டி கலந்து புதுக்கரகத் தூட்டுவாயனுபானஞ் சொல்லக்கேளே. 1332

சொல்லக்கேளனுபானந் தேனிஞ்சிச்சாற்றிற் சுகமான நறுநெய்யுங் கூட்டிப்பாரு, சொல்லக்கேள் தீருகிற தென்னவென்றால் சுவாசமென்ற தொண்ணூற்றாறும்போகும், சொல்லக்கே ளீளையொடு யிருமல்காசம் சூட்டிகவெட்டைமுதல் தூளாய்போகும், சொல்லக்கேளி தற்கொத்த செந்தூரம் புகுந்தால் தொல்வினைகள் விழுந்தோடும் சுருதிதானே, 1333

குமரித்தயிலம்.

சுருதிவெட்டை சூட்டுக்கு செப்பக்கேளு சுகமான குமரியென்னுந் தயிலந்தன்னை, சுருதி வெட்டிவேர் முத்தக்காசிதானும் தொகைவகைக்கிரண்டுபலந் தோணப்போட்டு, சுருதிகொற்றிமுடக்கொற்றான் மக்கிறுவேர் துடியான சிற்றாமுட்டிவிலாமிச்சிகாரி, சுருதிதாமரவளையஞ் சீராசெங்கழுநீர் துணுக்காகநொறுக்கி மூன்றுவகைபலமே. 1334

வகையொன்று பலமூன்று வீதஞ்சேர்ந்து மைந்தனேயிடித்துத் தூள்பாண்டத்திட்டு, தொகையாக தூணி நீர்விட்டடுப்பிலேற்றித்தோன்றவது நாளொன்றாய் குருக்கிதாங்கி, பகைபாமச்சாறுவகை கரிசாலைச்சார் பாங்கானசிறுகீரைச்சாறுங்கூட்டு, மிகையாத கொடிப்பம் மொசுமொசுக்கைச்சாறு மேற்குமறி நெல்லிக்காய்சாரே. 1335

சேரடா நீர்வள்ளிக்கிழங்குசாறு சிறந்தநல்விளநீர்தான் திறமாயப்பா, சேரடா படிதானும் வகைக்குநாலு சேரவிட்டு நாலொன்றாய் குறுக்கிவாங்கி, சேரடாமுன்வைத்த கியாழத்தோடு திரட்டுவாயாவின் பால் படிதானாலு, சேரடா தாழியொன்றில் காப்புக்கடித் திருத்திட் வெண்ணெய்ப்படி நாலுவிட்டுச் செய்யே. 1336

செய்யடா விநாயகனைப் பூசைசெய்து திறமாக மேல்மருந்து செப்பக்கேளு, செய்யடா நெல்லிமுள்ளி மதுரமேலம் சிறந்த சிறுநாகப்பூ தேவதாரஞ், செய்யடாமாசிட்டி மரமஞ்சள் செண்பகப்பூம் புழுக்கைவேர் செவ்வள்ளிக்கொடியும், செய்யடா நற்கெந்தஞ் செஞ்சந்தனம் சித்திபெறுஞ் சகஸ்திரமாம் வேதைபோடே. 1337

போடடா விலவங்கப்பட்டை பத்திரியும் புகழ்பூலாக்கிழங்கு கோட்டம் கிராம்புசாதிக்காய், போடடா புகழ்வேகைமூன்றுகழஞ்சி புாளவே பிடித்தாட்டு யிளநீராலே, போடடா கலக்கி யெண்ணெய் கியாழத்தோடு பொலிவானசாறுபாலுடன் தாழிக்குள்ளே, போடடா வடுப்பேற்றி தீயைமூட்டியுரையற்று மூணுநாள் சிறுகொதியுமிட்டு.

பூட்டியபின் ஞலாநாள் பதங்கடுக்கில் நீரும் பொசியாமல் வற்று பதமெழுகிலேதான், நீட்டியே சட்டிமுன்னங் குங்குமங் கஸ்தூரி நிசபுழுகு சட்டமொடு கோரோசனையும், வகைக்குநோட்டியேலகையொன்று கழஞ்சிரண்டு நறுக்கியிட்டு வடித்திடுவாய் தயிலந்தன்னைப்போட்டில்லை வண்டிகடிதா னியம்புடவைத்தும் போக்குடனே நால்நாளைக் கொருக்கால் முழுகே. 1339

முழுகடாசீயக்காயரைப்பு வெந்நீர்முழுக் கன்றுபால்தயிர்மோர்புளி கசப்புமகற்றும், முழுகடாமுறையோடே மற்றுநாள் கூட்டுமோசமில்லை குமரியென்னும் தயிலத்துக்கு, முழுகடா பித்தவெட்டைதலைகண்ணோவு முரடான வுட்சூடுகாந்தல்தீரும் முழுகடா தேகமொருகாந்திகாணும் மூக்கினீர்சிறப்புமலபந்தம்போமே. 1340

அரக்கெண்ணை.

பந்தமுடனரக்கெண்ணை பித்த வெட்சுரங்கள் பகையான சயித்தியநீர் மூன்றுவகைப்பணைப்பும், கொத்துடனே போவதற்குக் கொம்பாக்கோர்படிதான் கூறுகப்பொட்டணமாய் கட்டிப்பின்பு, சித்தமுடன் சலக்குறுணி தன்னில் தோளந் திரமாய்த் தீமூட்டி யெரித்துநாலொன்றுய்வாங்கி வைத்தவுடன் குறுந்தொட்டி வழுக்கிருவேர்வகையொன்று பலமஞ்சு நொறுக்கிடாயே. 1341

நொறுக்கியே சலக்குறுணி தன்னிற்போட்டு நோாகவேகவைத்து நாளொன்றுக்கி, முறுக்கியேயிவ்வகைகள் பிழிந்தகியாழங்கள் மூட்டுவாய்தயிர் தண்ணீர்படியிரண்டு, மறுக்கியே பசுவின்பால் படியும்நாலுவாகான பழங்காடிபடியிரண்டு, தறுக்கில்லா நல்லெண்ணைபடியும்நாலுதாழியொன்று சாப்பிட்டுசாற்றக்கேளே. 1342

சாற்றக்கேள்விநாயகனை பூசைசெய்து சதாசிவனைத்தியானித்துக் கற்கந்தன்னை, சாற்றக்கேள் முக்கிருகுறுந்தொட்டி வேரும்சதகுப்பை பொன்மெழுகுதேவதாரம், சாற்றக்கேளிலாமிச்சம் புழுக்கைவேன்நன் னாரிதற்கோலம் கோஷ்டமொடு முத்தக்காசே. 1343

முத்தக்கா சதிமதுரஞ் செவ்வெள்ளிக் கொடியும் முறையாகவ கையொன்றுகழஞ்சினாலு, சுத்தெக்கக்கியாழம்வைத்து யிடித்ததூள்த ன்னைச் சுகமாகக்கியாழந்தயிர் தண்ணீராலாட்டிக், கொத்தக்கலக்கியே யொன்றாய்ச்சேர்த்துக் கொடுந்தீயை மூட்டாமலொழுகுதீ யெரித்து, வற்றக்காச்சாமலே மூன்றுநாள்கறித்து மற்று நாலாநாளில் வடிக்கும் பதம்பாரே; 1344

பதம்பாருமெழுகுபதம் கண்டுபீயும் பருவத்தே புழுகுசட்டங் கோரோசினையும்போடு, விதம்பாருவகை யொன்று கழஞ்சிரண்டுமெல் லிசாய் பொடிச்சிட்டுவடிப்பாயப்பா, மிதம்பாருகுளிர்விட்டு வெண்டுகட் டிவைத்து மீறாமல் தானியபுடம் பத்துநாள்கழித்து, பதம்பாருநாலு நாத்கொருக்கால் மூழ்க வாகானசியக்காயரைப்பு வெந்நீரே. 1345

மந்தாரகாசத்தயிலம்.

வெந்நீரும் விளாவாமல் முழுக்கன்று தயிர்பால்வீறானபுளிகசப்பு ப்புகையிலையுமாற்றுத், தந்நீர்மையோய்க்கவெல்லாம் விட்டேயோடும் சாற்றினேன்மந்தாரகாசத்தின்தயிலம், பன்னீர்போல் தெளிவதற்குக்கி யாழந்தன்னைப் பாடுகிறேன்புலத்தியனே பகரக்கேளு, நன்னாரிகுறுந் தெட்டிபொன்னாங்காணி நல்லவட்டத்துத்திவேர் சிந்தித்தண்டே. 1346

சீந்தியொடு முடக்கொத்தான் சீரார்செங்கழுநீர் சிறந்தநலம்பனை க்கிழங்கு நீர்வள்ளிக்கிழங்குபோந்த அல்லிதாமரைவேர் வேட்டியிலா மிச்சுப் புகழாலம்விழுது மாதரம்பட்டையோடு சாந்தமலை தாங்கி வேர்நீர்ப் பூலாவேருந் தறித்திடுவாய் வகையொன்று பலந்தான்மூன்று, சேந்திடிச் சுக்லமயங்குறுணி தண்ணீர் தீட்டுவாய் மிடாவிலிட்டுத் தீயைமூட்டே. 1347

தீமூட்டியெட்டொன்றாய் குறுக்கிவாங்கி சீலைவெடிகொண்டுபின்பு செப்பக்கேளு, நேயமுடன் கடைமருந்து கற்கஞ்சேர்க்க நிகழ்த்து கிறேன் மேலமிலவுங்கமதிமதுரம் மாயமுறுவாய், மாமஞ்சள்சகஸ்திரவே திவாய் விளங்கச்சோலம் கோஷ்டம் சிறுநாகம், நாமுள்ள சதகுப்பை வெந்தயஞ் சாதிக்காய் நல்லசிறுதேக்கரத்தை செவியங்கூட்டே. 1348

செவியமொடு செண்பகப்பூத் தேவதாரம் திகைத்ததுதான் வகைக்கொன்று கழஞ்சுமூன்று, குவியவே நெல்லிமுள்ளி கெந்தங்கஸ்தூரி மஞ்சள் கூரியபுழுக்கைவேர் சாதிபத்திரியும், செவியமுறுங் கோதும்பை கிரும்பு நாற்கழஞ்சி செஞ்சந்தன் கொத்தமல்லி திப்பிலி சிற்றரத்தை, கவியவருகடுரோகணி விளாவரிசிதானும் கழஞ்சிரண்டு வகையொன்று காயவைத்து யிடியே. 1349

இடிபொடியைத் தாழைவிழுதுச் சாற்றிலாட்டி யியல்பாகச்சாறுபடி யொன்றுவிட்டு, வடிவான குமரியுட்சாறு மரைப்படியும் வளமான நல்லெண்ணெபடி மூன்றுகலந்து, முடிவானகியாழமுன்புவைத்ததிலே சேர்த்து முகூர்த்தத்தில் மஞ்சளில் காப்புக்கட்டி, படியாகக் கணேசனையும் பூசைசெய்து பரிவுடனே யடுப்பேற்றித் தீயைமூட்டே. 1350

மூட்டியே யெரித்திட்டு மூன்றுநாட்கப்பால் மெழுகுபதந்தன்னிலேவடிக்கும்போது, நீட்டியேபுழுகுடனே பச்சைக்கற்பூ ரமாங்கோரோசனையும் வகைக்கு மிருகழஞ்சி, மாட்டியே பொடித்திட்டுவடித்திடுவாய்தயிலம் வண்டுகட்டி தானியபுடம் வைத்தெடுத்துக் கொண்டு, மூட்டியே நாலுநாட் கொருமுழுக்கு முழுகுமுறையோடே சீயக்காயரைப்பு வெந்நீர்வாரே. 1351

வார்த்தெண்ணெ முழுக்கன்று போர்தயிர்பா லிறச்சிமறவுதலும் புளிகசப்பு புகையிலையுமாற்று, வார்த்தஎண்ணெ முழுகிவரில் போம்நோய்கேளு மைந்தனே மந்தாரகாசமொடு யேங்கல், வார்த்தெண்ணெமுழுகையிலிருமலிளை மகத்தானபக்கமந்தாராதாசம், வார்த்தெண்ணெமுழுகையிலே கபாலநீர் பாய்ச்சல் வாதமொடு பொறுமல்குறு வேர்வைபோமே. 1352

குறுவேர்வைநெஞ்சிறுமல் நெஞ்செரிப்பு கூரியவ ரோசிபித்தந்தலைநோயு கண்வலியுங், கிறுகிறுப்புமுறிந்தொடுங்கி யிவைகளெல்லாம் தான் கேளடாவப்புடனே துவரைவழுதலங்காய், மறுவில்லாமுளைத்தண்டுநறுநெய்ப்பாலம் மற்றொன்று மாகாதுவாதராட்சதனே. 1353

வாதராட்சதக்குளிகை.

வாதராட்சதக்குளிகை தன்னைக்கேளு வகையாக யுரைக்கிறேன்மண்மருந்து நீகேள், பெதமுறவளர் சூதம் பெரியலோகம் பிலமுடையகாந்தமொடு செந்தூரங்கள், நீதமுடன் வகையொன்று பரிந்தானெ

ன்று நேர்வாள மனோசிலையும் ரசகெந்திபோடு, வேதமுறை நாவிலிங் கம் வெண்காரந்தானும் விராகனஞ்சு வகையாகச் சுத்திசெய்யே. 1354

சுத்திசெய்த மருந்துடனே செந்தூரக்கட்டி சுருதிபெறநொச் சிலைச் சாற்றிலாட்டி, சுத்திபெறத்தூளாக்கி கெங்காசலத்தின் குப்பி தோன்றவே சீலைமண்ணேழுத்திரஞ் செய்து, சுத்திபெற மருடைச்சு தாழியொன்றில் நாலுவிரல் மண்ணும் சொரிந்து குப்பிவைத்தபின்பு மணல்கழுத்திற்கொட்டே. 1355

கழுத்துமட்டுமணல்கொட்டி திவைமூடி கமலவன்னியொருசா மம்கடாக்கினியும்பின்பு, பழுத்தவிழுபதினொன்றிசாமமாட்டி பார்ப்ப ளவில்செந்தூரமாகித்தப்பா, மழுக் தரித்தார்தேங்தொழுதுவனுபானத் தில் வியாதிகண்டுமருந்து கொடுவகையேதென்னில், இழுத்துவிடுந் திரிகடுகு வறுத்ததூளிலினித்தேனுடன் கலந்தூட்டுவாயே. 1356

ஊட்டுவாய்பணவிடை செந்தூரங்கூட்டியொருநாளைக்கிருபோதா யொடுங்கவிட்டு, மூட்டுவாய் சத்திகுன்மமுதலஷ்டகுன்மம் முழங்கு பதினெட்டுவகைகுன்மம் போகும், காட்டுவாய்வாதவகை யெண்பத்த ஞ்சு கலங்கொடுக்கும் பலசூலைவாய்வுக்கெல்லாம், நீட்டுவாய்சுரசன்னி தோஷத்திற்கு கெரியிஞ்சிமுருங்கைத்தோல் முலைப்பால்சேரே. 1357

ரோடா பூராகம் வெள்ளுள்ளித் தயிலம் சேரதிலே பணவிடை தான் செந்தூரத்தருந்தப், பாரடா விழுந்தோடும் பலபல நோயகன்று பாங்கானவனுபானம் பரிந்திட்டாக்கால், வேரடா அற்றுவிடும் வியா திக்கெல்லாம் விரிணமுதற் புண்பொடிகளிவைகள் தீரச், சீரடா திரி கடுகுத்தூள் தேனிலூட்ட சிலேற்பனந் தொண்ணூற்றாறும் சிரங்கும் போமே. 1358

வே று.

சிறங்குசொறிவு வெடிப்புறங்கி தீராப்பறங்கி யெரிப்பறங்கிதாங் கம் போன்றவனல்சூலை சன்னிவாத மண்டைநோய் அரக்கம்போன்ற பீனிசமுமான தொண்டைப் புத்தரையாப்பும் பிறங்காயோனி லிங்கப் புத்தெல்லாம் புத்தும் போமிதற்கே. 1359

இதுக்கே குஷ்டம்பதினெட்டு மிரங்குங்களநோய்துடைவாழை இது கண்பிளவை சிரந்தியுடனுருப் பவுத்திரம்பலவாய்வு, முதுக்கண் செவிநோய் செவிப்புத்து மூலரோகம் விப்புருதி, கதுக்காங்குறை நோய் விஷகடியும் காணுதோடுங்கண்டறிய. 1360

அசுவாதிசூரணம்.

அறிவாலறிவாயசுவாதி சூரணந்தன்னை யறையக்கேள், பிறிவாய் வந்த பலரோகம் போகும்படிக்கு வமுக்கிருவேர், குறியாயிடித்து வடி கட்டி கூட்டுமருந்து திரிகடுகு, நெறியாஞ் சாதிக்காய்ப் பத்திரி நீத மதாரங்கிரும்பாமே. 1361

ஆமே கடுகுரோகணியுஞ் சமபாகங்குருசாணி, ஆமேவகைக்கு முக்கழஞ்சி யனலில் வெதுப்பினுளாக்கி, ஆமேயிருபத்தைங்கழஞ்சு மதிகசீனி யிவையொக்க, ஆமேரெட்டி யமுக்கிருவேர்ப் பொடியுஞ் சூரணமாச்சே. 1362

வேறு.

சூரணமாச்சதனில் வெருகடிதான் நெய்யில்துடர்ந்து யிருபோது மண்டலந்தானுண்ண, காரணமாய்வரண்டு வற்றியிருந்ததேகம் கனத் தவுடல் பூரித்துபருக்குமப்பா, பூரணமாய்தூலித்துப் பூரித்தோர்க்கு பூட்டடா தேனிலே மண்டலந்தான் வற்றும், வாரணமாய் பித்தமொடு பாண்டுதீர வாழ்மேதை புளியாத மோரிலூட்டே. 1363

ஊட்டடா யெலிகடிக்குங் பசுவின்நீரி லொடுங்காத சித்துவிஷந்தே ட்கு வேப்பெண்ணை, பூட்டடாவிளக்கெண்ணை மேலும்பூசு, பொல் லாதயீயொடுசோகைதீர, மூட்டடாவெள்ளாட்டுநீரிலேதான் மிகுந்த பெரும்பாட்டுக்கு யெள்ளெண்ணைவெல்லம், நீட்டடாவிரியனுக்கு வெந்நீரிலூட்டி நிகழவே பூசிருடநின்றபோமே. 1364

நின்றுபோம் தலையினைத்திருந்தாலப்பா கோரவின்பாலிலேயூட்டு லூட்டு, நின்றுபோம்ஷட்குன்மம்வாய்வுமரோசிக்கு நீட்டடாகச்சல்பழ ச்சாற்றிலேதான், நின்றுபோஞ் சூலைகளுக்கமுரியிலே யூட்டநிலாத சோகை காமாலைபோ, நின்றுபோம் நிமபத்தின் சாற்றிலுண்ண நிலை கெட்டுப் பிள்ளையிலாவதற்குக்கேளே. 1365

பிள்ளையில்லாதவர்க்குமப்பா பிரமியிலைச்சாற்றில் பிசகாமல் நல் லெண்ணெய் பரகலிலைச்சாறும், தள்ளாதமிளகுடனே கூட்டியுண்ண சந்ததிதானுண்டாகுந் தாட்சியில்லை, கள்ளமுள்ள கைமசக்குக் காய் வெண்ணை தன்னில் கனகமெழுகோடருந்து கனிவுண்டாகும் தெள் ளிய நற்காயமொடு வுப்பிலிச்சாற்றி லருந்த தெரிவையர்க்கு மாத விடை சிறக்குந்தானே. 1366

குஷ்டத்திற்கு.

தானென்ற குஷ்டமெல்லாந் தீருதற்கு தனித்தவேப்பெண்ணை தனிற்சாரித்துண்ணு, தானென்றசெய்யமதான் கடிவிஷங்கள் தீரச் சலி யாதே வெள்ளாட்டு நீரிலூட்டி, தானென்ற மேற்பூச்சு விப்பிருதி

தீரச் சாற்றினேன் வெள்ளுள்ளி வசம்பு வெந்நீரிலருந்து, தானென்ற மேற்றட்வி விரியன்கடிதீர தனிப்பசுவின்பாலுண்டு மேலுந்தடவே.

மேலேறுவாய்க்கு வயிறுபோவுக்கு வெற்றிலையிற் பொதித்துண் டுவெந்நீருங்கொள்ளு, கால்கை முகவெரிவுக்குஞ் சிரங்கும்போக்ககறுத் தாட்டி நீரிலுண்டு துவாலைபோடு, சாலவே வாதத்துக்கோதண்டத்த யில மதனில்காச்சியுண்டு மேச்சலியவகைப்போடு, நீலனென்ன வருஞ் சன்னிதீர நல்லெண்ணை நினைவுடன் காச்சியுண்டு மேலும்பூசே. 1368

பூசுவாய் மலக்கக்கு மிருமலுக்கும் பூட்டடா கொண்டத்தி வருந் திமேற்பூசு, பூசுவாய்குடைவு கெற்பமுகவாய்வு மப்பனேயிஞ்சிச்சா றதனிற்கொள்ளு, நேசமுடன் மேகவெட்டை தானுநஷ்டம் நின்றது வுந்திருதற்கு காவின்பாலிலருந்து, மாசற்றுக் கசப்புடனே புளிப்பு மாற்று மண்டலந்தானுண்டவர்க்கு வினையும்போமே 1369

போமப்பாவாறு திங்களுண்ட பேர்க்கு பிலமெனுமாயசுவிர்த்திக் கும் கடுவேன்காண், காமப்பா சொல்லிவிட்டோம் காயசித்தியாகும் நலம்பெறவேபன்னிரண்டு திங்களுண்டபேர்க்கு, வேமப்பாதேகமது பொன்னிறம்போற் சிவந்து வேற்றுருவாஞ்சகத்திரசுதிபிலனுண்டா கும், ஆமப்பா கண்டதெல்லாந் திண்ணுணது ஆச்சரியமிதின் பெருமையரர் கண்டாரே. 1370

வேறு.

கண்டங்காரி தூதுவளை கடியவாடாதோடையிலே, ஒண்டவுலர்த் திப் பொடியாக்கி யுறுதூள் நன்றாய் வடிகட்டி, பண்டோர்செய்த மு றைப்படியே பகரக்கேளு திரிகடுகு, விண்டார்நத்தைப் பொடியிவை கள் வகைக்காழாக்கு விளம்பினனே. 1371

விளம்பக்கேளு கொம்புத்தேன் வெதுப்பிச்சட்டி காயவைத்து குழம்பாய்க் காய்ச்சியதில் பொடிகள் குமுறத்தூவிக்கிண்டிடவே, தழ ம்புச்சீனி யாழாக்குத் தானுந் தூவிக்கிண்டியபின், நழம்பநறுநெய்யா ழாக்கு நல்மாய் விட்டுக்கிண்டிடுமே. 1372

கிண்டியெடுத்த லேகியத்தை கிரிகையுடனே புதுக்காக, மண்டல மமைத்து மூன்றுநாள் வளமாய்த் தான்றிக்காயளவு, உண்டேயந்தி சந்தியோடொரு மண்டலத்தி லொழிவதுகேள், கண்டாலோடுமந்தார காச்சுவாசங்கசநோவே. 1373

வேறு.

நேரவான யகாவாத சன்னிக்கோதயிலம் நோக்குமுன்னே ஓழிந்துவிட செப்பக்கேளு, காவான முள்ளுவிலா மூன்னேவேரும் கழற்சிவேறான துத்திப்பட்டையோடு, பாவான சீந்திவே ரமுக்கிருவேர் பற்படம் நிலவேம்பு யெட்டிவேரும், கோவான வெட்டியிலாமிச்சம் வேருங் கொடியசிறு குறிஞ்சிவேர் மலைதாங்கிவேரே. 1374

மலைதாங்கி துதிவேர் நஞ்சுண்டான்பட்டை வாகான முருக்குந் தாம்பட்டையோடு, உலையாதவாவரைவேர் கிளிமூக்குகிழங்கு உசிலம் பட்டையொடு கடம்பு நாவல்பட்டை, நிலையானசாரணைவேர் புளியம் பட்டை செம்பிரண்டை மணிப்பிரண்டைகிழங்குகூட்டி, துலையான பசலைகிழங்கு சூரசம்பட்டை சுள்ளிவேர் முள்ளிவேர் முள்ளடியின் கிழங்கே. 1375

கிழங்குவகையல்லாது சீந்திவேரும் கிலுகிலுப்பை வேரழிஞ்சில் பட்டைவேரு, முழங்கிய கொன்றைப்பட்டை ஆயில்பட்டை மூதண்ட நரியனுர் பொரியரிசிகூட்டி, களங்கமில்லா தெருக்கம் பாலத்திபட்டை கருவேலம்பட்டையொடு கருங்காலிபட்டை, விளங்குபெருவாகை பட்டை குமிழம் வேரும் வில்வவேர் வெள்ளறுகு சிவனர் வேம்பே. 1376

வேம்பினிடபட்டை முக்குறண்டி நெல்லிப்பட்டை வீறுணதோடைவேர் பனைமேற்கோவை, மாம்பட்டை புரசினிடபட்டைரசங்குப்பி மால்கிழங்கு வேங்கைபட்டை நொச்சிவேரும், சோம்பில்லாச்சங்கரம் பட்டையோடு சுறக்குடைய சத்திசாரணையின்வேரும், விம்புடைய எலுமிச்சு நாரத்தம்வேர் மிளகுசாரணைவே ரமுக்கிருவேரே.

வேரானமுருங்கைவேர் புன்முருங்கை வேரும் வெள்ளிலம் பட்டையொடு லவுங்கப்பட்டை, சீரான சங்கம்வேர் சிலந்தியாங்கொடியும் செண்பகந்தாழையொடு சிற்றுமணக்கம்வேர், பேரான விளாவின் வேர் பெருகுருஞ்சிவேரும் புங்கம்வே ரதின்பட்டையு வாய்வேழுங் கூட்டு, கோரான கொழுஞ்சிவேர் விஷ்ணுகாந்தி நிலைத்த முத்தக்காசு கண்டங்காரிகூட்டே. 1378

கூட்டடா ஆடுதின்னுபாளை கஞ்சாங்கோரை கூறரியமாவாத மடக்கியிட வேறும், கூட்டடா புலிதொடரி வேரேழி முள்வேறுங்

கொடிய கார்த்திகைக் கிழங்குவகைக் கிரண்டுபலந்தான், கூட்டா தரியிட்டு யிடித்ததாளுழக்கு கொட்டா நாற்குறுணி சலம் பாண் டத்தே. 1379

பாண்டத்திலிட்டதையு மடுப்பேற்றிதீயை பரிவாக யெரியிட் டெட்டொன்றாய் குருக்கி, பாண்டத்திலிட்டபின்பு சாறுவகை தன் னை பகருகிறேன் கரிசாலை குப்பமேனி, பாண்டத்திலிட்டதல்லால் கறுநொச்சி பழுதில்லா வெள்ளைநொச்சி மாவிலிங்கவிலையும், பாண் டத்திலிடுவதற்குப் பெருந்தும்பை கொத்தான் பகர்வேலிப் பருத்தி யிலைப் பொன்னாங்காணி. 1380

காணிபொன்னாவரை யிலையுமெருக்கிலைபோற் பழுத்தல் கடிய விதாயிலை வகைக்கு கால்படியுஞ்சாறு, ஆணியென்றும் வேப்பெண்ணை புன்னையெண்ணை யழகான நல்லெண்ணை யிலுப்பையெண்ணை, பேணி வரும் புங்கெண்ணை யிவைகளது சமனாய் பேறுபட வகைக்குழக்குப் பசுவிட் கோமியப்பா, லீணிய வெள்ளாட்டுப்பால் கோமயமும் வகை க்கு ஓருபடிதா னிடுகற்க முறைக்கின்றேனே. 1381

உரைக்கிறேன் வெள்ளுள்ளி வசம்பு திப்பிலியு மொப்பரிய காட் டுச் சீரலமதாகும், விரைக்கிறேன் சன்னி நாயகமுங்கூட்டு மீறுமல் வகையொன்று கழஞ்சிமூன்று, அரைக்கிறது சாறுகளால் கலக்கியிட்டு அப்பனே தாழிபொன்றில் காப்புகட்டி, நிறைக்கிறே னடுப்பேற்றி தீயை மூட்டி நினைவாகப் பதத்திலே வடித்துவையே. 1382

வடித்துவைத்த தயிலத்தை வண்டுகட்டி வளம்பெறவே நாள் சென்று யெடுத்துமைந்தா, குடிக்கவொரு கழஞ்சியிடு மூன்றுதின மப்பா கூறுக நசியமிடு கால்கை மேற்பூசி, நொடிக்குமுன்னே பதி மூன்று சன்னிபோகும் நாற்பிரட்டி யிருபதல்லால் வாதம்போகும், முடிக்க முகவாதமொடு பட்சவாத முயலகனுங்கு மாகண்டனெல்லாம் போமே. 1383

போமப்பா வாதமென்ற தெல்லாம்போகும் பொல்லாத் சன்னி யொடு தோஷம் போகும், நாமப்பா வடக்கமெல்லாம் சொல்லிவிட் டோம் நன்னூலாஞ் சூத்திரத்தை யடக்கியாடும், வேமப்பா தொட்ட தெல்லா வியாதிகாணில் மெய்யுள்ளோர்க் குரைப்பதுவே விசேஷ மாகு, மாமப்பா மற்றொறை யடுத்திடாதே யறைகிறேன் காவாட்சி விக்கலிருமலுக்கே. 1384

விக்கலுக்கு.

மயிலிறகு சுட்டகரி மதுரஞ்சீனி வடிதேனில் திப்பிலியும் வகைவைக் கூட்டி, ஓயிலாகக் கற்கண்டுஞ் செய்வீராகி லோடிடுமே நாவரச்சிவிக்கல்சத்தி, பயில்தாக முள்படலமுள்ளோம்காரம் பகராமற் பகர்ந்ததுவும் பஞ்சாங்கண்டாய், அயிலாக வின்னமொன்று சொல்லக்கேளு அப்பனே வதிதாகம் போகவதிநெல்லி. 1385

வேறு.

நெல்லிநெற் பொறிசர்க்கரை திப்பிலி, கொல்லிமான் கொம்பு கூட்டி யுரைப்பது, வல்லிமாமூலைப்பாலி லுரைத்திடச், சொல்லியோடும் விக்கலுஞ் சித்தியே. 1386

வில்வம் நெற்பொறி சர்க்கரைதிப்பிலி, கொல்லிமாமலை தேனிற் குழைத்திட, வல்லவிக்கலுஞ் சத்தியுமாறிடுந், தொல்லையில்லைச் சுகநீடுகாலமே. 1387

நீடுமாதளை நெற்பொறி சர்க்கரை, தேடு திப்பிலி தேனிற் குழைத்துண்ண, நாடுவிக்கலிருமலும் சத்தியும், பாடியோடும் பகரதிமதுரமே. 1388

வேறு.

அதிமதுரஞ் சீரகம் வெங்காரம் கோஷ்ட மழகான திப்பிலிவங்காளச்சீனி, இதுசமனு யெலுமிச்சம் பழச்சாற்றிலேதா னியல்பாகவுய்த்திடவே விக்கல்போகு, மதிசார தோஷமொடு தாகம்நீங்கு மப்பனே மருந்திடு வாட்சியிருமலுக்குப், புதுசாக சண்டமாருதலேகியத்தை புகலுகிறேன் புலத்தியனே கண்டங்கரி. 1389

வேறு-சண்டமாறுதலேகியம்.

கண்டங்கரி தூதுவளை கடியமிளகுதக்காளி, அண்டர்துதிக்குஞ் சங்கிலையுமாடாதோடை துளசியிலை, கொண்டேவகைக்குக் கால்படியாய்க் கூறப்புதுசாமஞ் சட்டியொன்றில், மண்டவதுவுமரைப்படியாய் வற்றக் காயச்சிக் கொள்வீரே. 1390

காய்ச்சிக்கொள்வீரதின்பிறகு கருப்புக்கட்டிப் பலமஞ்சு, பேச்சில்லாதே பொடிசெய்து பின்சாற்றிறில்தாவியது, நீசில்லாதே கால்படியா நிற்கும் நிதானங்கண்டறிந்து, கூச்சமறவே கடைமருந்து கூட்ட வகையுங் கூறுதுவே. 1391

வேறு.

கூறியகடுக்காய் திப்பிலியரைத்தை குறையில்லாதவிகையொன்று கழஞ்சிபத்து, நீறியே வெயிற்காயவைத்து இடித்து நேற்றியாய்ப் பொடியை வடித்துக்கொண்டு, தேறவே முன்பு வற்றிக் குழம்பில் சேர்ந்திடவே பொடியதனைக்கூட்டத்தூவி, ஆறுதற்கு முன்பாகயடிப்பற் றுமல் அடிக்கடிபேருவமதாய்க்கிண்டு கிண்டே. 1392

வேறு.

கிண்டியரைக்கால்படிதேனைக்கிளறவிட்டு வதின்பின்புமாண்டநறு செய்மாகாணிப்படியைவிட்டு மத்திக்கச்சண்டமாருத லேகியத்தைத் தான்றிக்காய்போலுண்டை செய்துகொண்டுவரவே யிருமெல்லாம் கூப்பிட்டோடுங்கண்டீரே. 1393

கண்டீர்கைப்புளியகற்று கறியப்புடனே கச்சலக்காய் விண்டார் முருங்கைப்பிஞ்சவரை வீதிலாதவழுதலையும்பண்டார் நறுநெய்பால் துவரைப்பருப்பு மறுத்தழைக்கீரை தண்டாதூதிசமூலமும் நீதள்ளா தரும்பத்தியங்கடந்தே. 1394

மந்தாரசக்குழம்பு.

கடந்தேயிருமல்மந்தாரகாசமுதலாய்ப் போவதற்குவடர்ந்த குழம்புவொன்றுதனை யுரையக்கேளும் புலத்தியரே தொடர்ந்தே கனகமிள கொன்று துய்யநறுநெய்தண்ணம் படர்ந்தசீனி யிவைமூன்று வகைக் கோர்பலமாய்ப்பாவுசெய்யே. 1395

செய்வாயிரண்டுசாம மறைதெளி வாட்டிப்பிகின்போல நய்யும் பருவம் புதுக்காத்திட்டு நாலாநாள் மூதவாய்வையம்புகமூ மந்திசக்தி வாகாயதான்றிக்காயளவு உய்யும்படிக்கு அருந்திவரிலொருமண்டலத் திலோடிடுமே. 1396

வேறு.

ஓடிடும்வியாதிகேட்கவுருதிகேள் தேங்காய்ப்பாலில்கூறிடும் சிறு பயற்றப்பறப்பிடு கருத்தபாலால் நாடிடுமொன்றுயக்காய்ச்சி நயம்பெற வுப்பும்போட்டு தேடிடும் படிக்குக்கொள்ள தெளிந்து பஞ்சாகப் போமே. 1397

வேறு-பஞ்சதாரைக்குழம்பு.

பஞ்சதாரை நாற்கழஞ்சு பருத்தசுக்குமுக்கழஞ்சு இஞ்சிதிப்பிலி இருகழஞ்சுயேலந்தானு மொருகழஞ்சு அஞ்சங்கூட்டி பொடிசெய்து

ஆவின்பாலில் கொள்வீராகில் மிஞ்சுபித்தந்தலைநோவு வெள்ளொக்கா
ளமுள்ளதெல்லா மிஞ்சிப்பயந்தா னடங்கி யடவிக்கேகிப் போய்
விடுமே. 1398

வேறு.

மலைதாங்கி நன்னாரிமுள்ளிவேரு மகத்தானமுள்ளிக்காய்தான்றிக்
காயு, மிலையாடாதோடை கொடிதூவியோடு இசைந்ததொருதூதிகண்
டங்காரிகூட்டி, யலைவில்லாதொருநாழிநீரிலப்பா அஷ்டபாகம்வகைக்
காற்கழஞ்சுகூட்டி, நிலவரமாய்த்தேனுமொரு கழஞ்சுகூட்டி, நேய
முடன்றிப்பிலியும் மேற்பொடியும்போடே. 1399

வேறு.

போட்டகியாழம்பொடிதேனும் பொருந்தமூன்றும் தினங்கொ
ள்ள, நாட்டமாகப்பின்னி நின்றநாடுசெம்பைப்படுங்கண்டாய் மீட்டு
மத்தோடே, மிளகுஞ்சுக்குங்கூட்டியகியாழத்தில் வாட்டமின்றிப் பொ
டிதேனும் வருந்திக்குடிக்கவளமாமே. 1400

வளமாந்தாது தாகமிற்குமலமும் பந்தமயக்கமருஞ்சனமாய்த் திர
ந்ததலைநோயும், சனிறென்றேறும் வாய்வுக்குத்துளையாங்கால், கைமே
ல்வலியுமோங்காரத்தோடிருமல், மழையோர்முனிவோர் நாடிவகை பக
ர்ந்தார் வாந்தியிருமலுக்கே. 1401

வேறு வாந்திவிக்சலுக்கு.

வாந்தியுமிருமலுமருந்து விருக்குஞ் சேர்ந்திடுமிளகுடன்சுக்குத்
திப்பிலி கூர்ந்திடும்விலைவேர் கொத்தமல்லியும் சாந்தமாயிவையஞ்சும்
சமன் கொடாக்குமே. 1402

ஆக்கிய மருந்தஞ்சுளவுநாழி நீர்வாக்குடனெட்டொன்றாய் வற்ற
க்காய்ச்சியபின், போக்குடன் கொண்டவர்பொலிவும்வீறும் விட்டேக்
கியே பறந்திடுமியல்பதாமிதே. 1403

வேறு.

திரிபாலையிருவேலியிலாமிச்சம்வேர் சிறந்ததோர் முண்டகத்தின்
வளையமொடு, நெரியானவிழி மரப்பட்டையோடு நிறையொன்றாய்
வகைக்குமிருகழஞ்சுகூட்டி, குறியாக விடித்ததுவு முக்கூறிட்டுக்கொ
ண்டிடவே, யிருநாழிநீரிலிட்டுப் பிரியாமலொருகூறு அஷ்டபாகம்
போதிரண்டுகொண்வர யிணிநில்லாதே. 1404

நில்லாதவிஷபாதச் சுரமும்மாந்தி நெஞ்சரிப்புக்குளிர் தாகம் வேர் வைகோழை அல்லாதமலசலங்கள் மூரியாலு மப்பனேகண்மயக்கம் சதி யோடுமெல்லாம் விட்டோடுமாஞ்சோகை நீக்குமிதுக்குகைக் குற்றம் வரிலேமுதேபோம், வல்லவர்கள் கண்டறிந்துகொடுக்கத்தீரு மாறலாய் அருசுரும் வாராதன்றே. 1405

வேறு-மாரல்சுரத்துக்கு.

மாறல்சுரங்கள் மாற்றுதற்குவகைகேள் சீந்திபேய்புடலும் கூறு முத்தக்காசுவேற், கொம்புபற்படாக மிவையும்தேற வகைக்குவொரு கழஞ்சுசிதறவிடித்துக், கூறுசெய்துபேறுபடவே யிருநாழி நீரிலொரு கூறதிற்போடே. 1406

போட்டேகியாழ மெட்டொன்றுய்க் குறுக்கிவாங்கிப்போதி ரண் டுகொட்டமுடனே, தேன்கழஞ்சுசுயமாய் மூன்றுநாளருந்த வாட்டமே துமில்லை யந்தமாறல் நாலுமூன்றும்போம், கூட்டமுடைய பல்சுரங் கள் குளிருந்தாகம் வேர்வைபோம். 1407

தாகம்வேர்வை மலப்பந்தஞ் சந்தித்திருந்த தொந்தமொடு, வே கம்சோகம் நீரேற்றம் விட்டேயோடும் பத்தியங்கள், யோகமடக்கு ம்புளிகசப்பு மோரும் புகையுந்தள்ளிவிடு, மாகந்தெளியனன்னப்பா லப்பா லருந்தசுகமாமே. 1408

திப்பிலாதிசூரணம்.

ஆமேயிருமல் சளத்துக்குமடங்கத் திப்பிலாதியைக்கே, ளாமே சூரணஞ் செயவதற்கு அப்பா திப்பிலிமூன்றுபத, மாமேரெண்பல மாஞ் சிற்றரத்தைமிளகு வால்மிளகு, ஆமே யேலமிலவங்கப்பத்திரிப் பட்டை யதிமதுரம். 1409

மதுரந் திரிபாலை சாதிக்காய்பத்திரி கிரும்புவாய்விளங்கஞ், சதி ராம் கொத்தமல்லி குருசாணி தாளிசபத்திரியும், மெதிராஞ் செவியஞ் சிறுதேக்குமிரு சீரகமுந் திப்பிலியு, நதிராங்கூகைநீருடனே நறுக்கு மூலம் நாடிடுமே. 1410

மூலமமுக்கிறுவேரு மூன்றுகழஞ்சுவகை யொன்று சீலமுடனே காயவைத்துத் திரமாயிடித்து வடிகொண்டு ஞாலம்புகழும் தாதிகண் டங்காரி கரிசாலையு மூலர்த்தி யொலமெனவே யிடித்த பொடிவடி நால் படியாயுரைத்தோமே. 1411

உரைத்தோ மிந்தப்பொடிகளெல்லா மொன்றுய்க்கூட்டி யதிற் பாதி உரைத்தோஞ் சீனிகலந்திடவே யோகோ சூரணமானதுக்கு, உ

ரைத்தோம் வேனில் வெருகடியாயிருபோதுரை, னுரைத்தோ மீளை யிருமல் சயமோடு மரோசிவாந்தியுமே. 1412

வேறு.

வாந்தியுங் குடல்பிரட்டும் வாய்வும் வயிற்றுநோவும், தீர்ந்திடும் சிலேற்பனங்கள் தெளிவுறு மலசலங்கள், ஆர்ந்திடுங் கட்டுவிட்டு அதி சூடு மிகுந்தபித்தம், பேர்ந்திடும் நறுநெய்தன்னிற் பேணிநீ கொள்ளு வாயே. 1413

கொள்ளுநல்லனுபானத்திற் கூறினேன் வகையாய்க்கேளு, தெள்ளுமா துளங்கனியின் சாற்றில் நீதிகண்ணும்போது, ஒளித்தாஞ் சகல நோயும் ஓடிடு பித்தம்போகும், தள்ளிடில் புளிப்புகைப்பு மோர்புகை தானுந்தள்ளே. 1414

தள்ளிய கோழைவாந்தி சிலேற்பனந்தணர்ந்போக, வள்ளலே கியாழமொன்று வகுக்கிறேன் வயணங்கேளு, கள்ளமில்லாத கொத்த மல்லியு மேலங்காணி, நள்ளிருவேலிமூன்றும் வகையொன்று கழஞ்சு மூன்றே. 1415

கழஞ்சி மூன்றல்லாலின்னங்கறக்கேள் மதுரஞ்சுக்கு வழஞ்சிய கல்லகெந்த மிலவங்க பட்டைகானு மூளங்களிகூரண்டு கழஞ்சியா யொக்கப்போடு தழஞ்சியா யிடித்ததூளை தயவுடன் கூறுபோடே.

மோடனு மூக்கூறிட்டுப் பொலிவுடனொரு கூறுக்கு, நாடிரு நாழி நீரு நலம்பெற வெட்டொன்றுக்கித் தேடுநீயந்திசந்தி தினமூன்று மருந் தினுக்கால் பாடிமே ஓடுமென்று பத்தியம் புளியுங்கைப்பே. 1417

கைப்பொடு புளிப்புமாற்றிக் கியாழநீருந்திலப்பா, எய்பில்லை யிருமலீளை சிலேற்பன மென்றுவாந்தி பற்பலவரோசிகூடப் பாந்திடும். பாரிலின்னஞ் சொற்பமாய்த்திப் பிலாதி லேகியங்கூட்டுகிறேனே. 1418

திப்பிலாதி லேகியம்.

கூட்டுலேகியந்தானப்பா தொந்திப்பு க்ஷயங்கள்தீர நாட்டுப்பிலி கழஞ்சு நாற்பது பத்துஞ்சேரு, கூட்டுசுற்றாத்தை தானுங்கூறு முப் பது கழந் தீட்டுநற் கொத்தமல்லி பதின்கழஞ்சு சொன்னச்சேரே.

சேரடா மிளகுக்கு செவியந்திப்பிலியின் மூலம் சேரடா மதுர நெல்லிச் சீரகமிரண்டோடே லஞ்சேரடா நறுக்குமூலம் சிறுதேக்கு கூகைநீறுஞ்சேரடா வழுக்கிருவேர் குருசாளிதிருத்தக்கூட்டே. 1420

திருந்த வால்மிளகு தாளிசபத்திரி கடுக்காய் சேருபொருந்தவே வகைக்கு மஞ்சுகழஞ்செனப் பூட்டுமன்பு மருந்தின்னம் வகைக்கு மூன்று கழஞ்சது வகையாய்கேளு விருந்திலவங்கப்பட்டை பத்திரி விளம்பினேமே. 1421

விளம்பினேம் திரும்புசாதிக்காய்ப்பத்திரி இவைதானஞ் சுவளம் பெறக்காயவைத்து யிடித்ததூள் வடியுங்கட்டி பளம் பெறக் கண்டங் காரி தூதியுங் கரிசாலேப்பா, குளம்பெற வகைக்குழக்குப் பொடிவடி கொண்டுசேரே. 1422

சேரெருபடி கறுங்தேன் காச்சியே தெளிவுதன்னில்வார் பலமருந் தூத்தூளை வாக்குடன் விக்கிண்டி சீர்கண்டு கறுசெய்யுங் கால்படிவிட் டுக் கிளருப்போது பார்த்திப்பிலாதி லேகியம் பார்க்குப் பிரமாணஞ் செய்யே. 1423

பிரமாணமுண்டை செய்துபின் பொருயோதருந்தப் பிரமாண மண்டலந்தான் பிசகிலா துண்டாயாகில் பிரமாணம் வியாதிவாத சிலேற்பனம் பித்தத்தோடு பிரமாணம் பனைப்புத் தொக்கிபித்தவரட்சி போமே. 1424

போமலசலபந்தங்கள் பொருமல்நெஞ்செரிப்புத்தாகம், போமீளை யிருமல்வாய்வு திரட்சியும் ரோகிபோகும், போம் வலிகுன்மமும் போகுந்தானே. 1425

தானென்ற பத்தியங்கள் தன்னைகேள் புளிகசப்பு, தானென்ற தயிர்மோரோடு புகையிலை வாம்பாய்த்தள்ளு, தானென்ற கறுநெய் பாலுங் துவரையு மவரைப்பிஞ்சுங், தானென்ற முருங்கைச்சாறு வழு மலை முளைத்தண்டாமே. 1426

ஆமிளகுப்பு மஞ்சளறைக்கீரைத் தளவுதள்ளி, பாங்கருவேம்பு வுள்ளி சீரகந் தூதிவற்றல், ஆஞ்சிறுகீரை பொன்னாங்காணியுமழகாய் கூட்டி ஆமற்ற தொன்றுகாகு அறைகிறேனறைகிறேனே. 1427

வேறு பீனியத்திற்குரகசியம்.

அரைகிறேன் பீனிசத்து கசியந்தன்னை யப்பனே யாவெண்ணெ யுழக்காழாக்கு, அரைகிறேன் குங்குமப்பூ பச்சைகற்பூரமொடு அபி னிமருந்துங் கஸ்தூரி வகைக்கு கால்கழஞ்சி, அறைகிறேன் பொடிச் சிட்டு வேகவைத்துப் பதத்திலதை வடித்து ஆரவைத்து ஓமப்பால்கே

ளு, அறைகிறேனவ்வல்குறுணை வாயிலிட்டு அதின்பின்பு நாசியிலே நசியஞ் செய்யே. 1428

நசியஞ்செய் இப்படியே யந்திசந்தி நாள்மூன்றில் குணங்கண்டா ல்பின்னுமப்பா, நசியஞ்செய் நானு நாளாறுநாள்தான் நாசிநீர்பாச்ச லொடு புண்ணுமாகும், நசியஞ்செய் சூலபீனிசமும்போகுப் நாகரீக மாகுமின்னம் நசியங்கேளு, நசியமொன்று தேங்காய் நெய்யுழக்குவாங் கி நலமான குங்குமங் கஸ்தூரிசேரே. 1429

சேரப்பா வெந்துகொண்டு நசியஞ்செய்யத் தீருதபீனிசநீரெல் லாந்தீரும், ஆரப்பாவரிந்தமட்டும் சொல்லிவிட்டோ மாருக்குஞ்சொ ல்லாதே யடங்கியாடு, பாரப்பா விந்தநூல் பார்க்கப்பார்க்கப் பண்டித த்தின் திறமெல்லாம் பரிவாய்த் தோணும், கோப்பா யுள்ளவர்க்குச் சொல்லு சொல்லு நெறிகுறிகளில்லார்க்கு நீபூட்டாதே. 1430

பூட்டாதே யதைமாறி மருந்திடாதே பொற்பூவும் வாசனையாய்ப் பூட்டுபூட்டு, மூட்டாதே முறைபோடே யேதுஞ்செய்ய மோட்சத்தி வந்தடையு மோசமில்லை, கூட்டாதே யினமறிந்து கூட்டுகூட்டு கோடா னகோடி பிணிசூலையும்போம், காட்டாதே எந்தநாளும் பலநோயெல் லாங் கடைபட்டு வோடிடுமே கன்னரோகம். 1431

வேறு.

கன்னரோகங்கள்தெழுச்சி காணுங்குறியை கருத்தக்கேள், முன் னஞ்சூடு கொண்டதின்மேல் மூலங்கடுத்து மேலேறி, அன்னமொருத் துப்பசியன்றி யதிநித்திரை சோம்பலுங்கொடிதாய்ப், பின்னுங் கப்பல வாய்வாகிப் பீனிசம் கூடப்பிறந்திடுமே. 1432

கூடப்பிறந்த செவிக்கிரைச்சல் குடையுங் குத்துசலையொடு, வா டாநீ ராமநாசிதனில் வறட்சியிருமலுண்டாகும், தேடாதன்னம் விஷம் போலேதியக்க மயக்கமுண்டாகும், நாடா சீதங்கணத்துடலம் கய்யு மலர்நீக்கட்டிடுமே. 1433

கட்டுகண்ணி லொளிமயங்கும் கால்கையசைந்து வுளைவுண்டா முட்டிச் சளிறென்றெனக்குற்று மூச்சுச் சுவாசமதிகரிக்கும், வெட்டுப் பட்ட புண்போலே மேனியெங்கும் விதனமுண்டாம், மட்டுப்படாத செவிரோக மருந்து வெண்ணை வைப்பீரே. 1434

மருந்துவெண்ணெய்.

வைப்பீறுண்ணனெய்தனக்கு வகைகேள் நறுநெய் மருந்தாத் தை வெப்பாலரிசி சீரகமும் விளங்காய் சாதிக்காய் பத்திரி ஓப்பாங்கி

ராம்பு மதிமதுரமோம மிரண்டு தாளிசப்பத்திரி அப்பால் திரிபால் திரிகடுகு மிளகு கொத்தமல்லிவகை. 1435

வகையோரிடையா யதினிடை நற்சீனிக்கூட்டி மருந்துதனைத் திகை வெதுப்பிப் பொடியாக்கிச் சீனிகலந்து நெய்நாழி பகையில் லாதே வெந்திறக்கித் தேனுமளாவிப் பத்துடனே நகையாதிறக்கியுண்டு வரநசியம் செய்யுநலமே. 1436

ஆமேசெவிக்குள் வருரோக மடங்கா நறுநெய் வேப்பெண்ணெய், மாமல் துயின்றகடல் நுரையும் வசம்பு வெள்ளுள்ளி வாள்மிளகு, நம துடல்போல் நற்சோதி நற்சீரகம் பூசிக்கூடும், போமேவெந்துவிட்டடை க்கும் புனிதமாகும் காதெழுச்சி. 1437

சகலரோகந் தனக்கு மெண்ணெய்தானேலாதி தயிலத்தைப் புக லாய்வைதது முழுகிவரப்போமே, சகலபீடையுந்தான் இநலாத்துவே சரீரத்துக் கேற்குஞ் சரீரசவுக்கியமாம், சுகமாயிருக்கும்படி சொன் னேம் பித்த சிலேற்பனசுரம் போமே. 1438

பித்தசிலேற்பன சுரந்தன்னைப் பேசுங்காலவகைகேளாய், குத்து ம்சூளையு மிடுப்பசைந்து குளப்புப்பேசுங் குறுவேர்வை கத்துமிருமல் கைகால்கள் கடுக்கு மூர்ச்சையசதியுண்டா மெத்தக் காதுகுடைந்தி ரையும் வேதுப்பு நாவு முலர்ந்திடுமே. 1439

உலர்ந்தே நாவிற்றிலா முட்போலுறையுந்தாகவயிறிரையும், கல ந்தே பிரிந்தமான்போலே காதல்கொடுதலுங் கடைசிவக்கு மலந்தான் கட்டும் சிரங்கனக்கு மனமுங்குமட்டு மதிமயக்கி மலர்ந்தே முகமும் சாத்தியமென்னவறைவீரே. 1440

அறையுங்குணத்தின்படியாயிருந்தா லதற்கோர் கியாழமருந்தக் கேள் சிறந்தமுத்தக்காசுடனே தெசாபுரமிலாவிச்சம்வேர் நிறைந்த பர்பாடாகமிருவேலிவெட்டால் நெறபொறியும் துறந்தமாவினிலையிற கில்சொன்னே மிதுதான் கொத்தமல்லி. 1441

இதுவொன்பதுவுஞ் சமன்கூட்டி யிடித்துநாழிநீரிலிட்டு, அது தானெட்டி லொன்றாக்கி யரத்தை பொடிமேல் முலைப்பாலும் விதியா லிரவுபகலு மிருபொது குடிக்கவிடாதாகில் பதியவிதிலேயாத்திரைகள் பாங்காய்க் கொடுநோய் பறந்திடுமே. 1442

பறந்தவியாதியேனென்றால் பழையசுரமும் வகைதோஷம், நிறை ந்த சன்னிபதின் மூன்றும் நெடுமூசசசதி நெஞ்செரிப்பும், பிறந்த

விக்கல்பித்த சிலேற்பன தோஷசுரமும் பிரிந்தோடும், சிறந்தமலமூத்
திர நிகழுந் தெளிந்தே விழியுஞ் சிறந்திடுமே. 1443

மூடும்மை செய்வாறேதென்னி லீரேழுநாள் வீறுடுங்கும், படு
பாட்டனேகம் கைகடந்த பருவமென வேமலேவுண்டாம், நெடுநாள் மல
மூங்கட்டிவிடும் நிகழ்கடுகு ரோகணி கடுக்காய், திடமாயிந்துப்புடனே
பேய்ப்புடலுங் கியாழத்துடனேகூட்டே. 1444

கூட்டிக் கியாழமுலேப்பாலுங் குறுகியிஞ்சிச்சாறுடனே, ஆட்டிக்
கெடுக்க மேற்பொடி திப்பிலியுங் கோடாகூஷியிட்டு, மூட்டமல பந்த
மூங் கழியும் மூர்ச்சைதெளியுஞ் சன்னிபோம், தாட்டாமரைக்கட் புல
த்தியனே சகலதோஷந் தணிந்திடுமே. 1445

வேறு-கற்பமுறை.

தணியப்பாவுலேமுகத்தில் துருத்திகொண்டு தரயாகவூவிடுஅழுகு
மட்டும், பணியப்பர் வெடுத்தநீண யாறவைத்துப் பாங்காகப்பின்போ
ருக்காலழுகஆூது, துணியப்பா யின்பமது குகையில் வைத்து துலங்
கவே பின்பொருக்கால் நன்றாூது, அணியப்பா கந்தமதுதராப்போல்
நிற்குமாகா காந்தசத்தருமைதானே. 1446

அருமையென்ற காந்தத்தை யுருகுகையில் வைத்து அப்பனே
மூன்றுதர மழுகவூது, பெருமையென்ற சாந்தமது சத்தாய்ப்போனால்
பேச்சேது சூதமொரு பலத்தைத் தாக்கிக், கருமையென்ற காந்தமது
சோதித்தேறுங் கருவலேயல் வீரொடு காரங்கூட்டி யரிமையென்றசார
மூடன் பழச்சாற்றாலாட்டி யுலர்த்து வாய்பாணம் போலே வில்லே
செய்யே. 1447

வில்லேசெய்தமருந்தெல்லாஞ் சமனாய்ச்செய்து மீறியதோர் காந்த
சத்துருக்கும்போது, சொல்லுவேன் சத்துக்குச்சமனாய்த்தாக்கு துடி
யாகவொவ்வொன்றிற் கொடுக்கவாங்கும், அல்லாது சமனாகத்தாக்கிப்
பின்பு அப்பனேயோடுகொண்டு மூடிக்கொண்டு, வல்லதொருகையழுக
நன்றாூது மகத்தானகாந்தமது வங்கந்தானே. 1448

தானென்ற காந்தமதுவீயமாக சாத்திரமெல்லாம்படித்தே னரு
மையென்றே, நானென்ற வாணவத்தால் வெளியிற்போட்டேன் நாட்
டாதேகள்ள ரென்றபிள்ளேக்கெல்லாம், வானென்றவீயமதைப்பதனம்
பண்ணு வண்மையாயத்தினுடைய நாகங்கேளு, வேனென்றவயப்பொடி
தான் பலந்தானைஞ்சு வெள்ளேயுடன்தாளகமுஞ் சூதங்கூட்டே. 1449

கூட்டுவாய்கற்கமொடு சாரந்தன்னைக் குறிப்பாகவகைக்கோர்பல வீதங்கூட்டி, மூட்டுவாய்பூரித்து கழஞ்சுஒன்று முற்றியதோர் வெண் கருவி நீராலாட்டு, ஆட்டுவா யிருசாமமரைத்துப் பின்பு வளமாகவில்லை செய்துரவியிற்போடு, காட்டுவாயுலர்ந்த பின்பு குகைக்குள்ளாக நல மாக வைத்ததனைக்குகைவாய் மூடே. 1450

மூடப்பாவோடுகொண்டு சீலைசெய்து முன்போலே யுருக்கியெடு வெண்கலமாய் நிற்கும், தேடப்பா முன்போலேசோதித்தேறு செக மெல்லாமிரும்பினிட வீரங்காணூர், ஆடப்பாவிதிறுட்டுச் சித்தராட்டு ஆரகராகாந்தமது கூடிற்றுனல், வீடப்பா பெலத்துதடா மறலியேது மிதமிஞ்சுமென்று சொல்லிமறைத்திட்டாரே. 1451

மறைத்திட்டா ரயத்தினொடு காந்தந்தன்னை மக்களே யவமிருத் துக் கட்டுமென்றி, குறைத்திட்டா ரறுசுவையும் சுழற்றுமுன்பே கொள்வதற்கு மூதல்கற்பமென்றுகூறு, நிறைத்திட்டே னுலகமெல் லாஞ் சுததாய்ப்போக நிலையான தாறுவகை யுறுதிசொன்னேன், முறைத்திட்டத் தப்பாமல் கற்பமுண்ண முந்தவே அயமதொரு மொழிந் திட்டேனே. 1452

மொழிந்ததொரு அயக்காந்தம் பலந்தான் ரண்டு மூத்தழ்ச்சேர் புலத்தியனே வகையொன்றுக்கு, தெளிந்ததொரு தங்கமது பலந்தான் ரண்டு சேரவே மூன்று மொன்று யுருக்கியாட்டு, குளிர்ந்ததொரு கல் வத்திற் பொடியாய்ச்செய்து கூறப்பா கண்டிடைக்குச் சவ்வீரத்தை, வழிந்தோடு மச்சதிலே பணியிற்போடு மாட்டடா தங்கவிடை சூதந் தானே. 1453

சூதமுற வாலையதாய் நாள்மூன்றில்தான சுருக்காக நித்தியமொரு சாமமாட்டி, நாதமுற முலைப்பாலிலாட்டு வாட்டு இராப்பனியிற் போட்டுவிடு மூன்று நாள்தான், வாதமுற வேதையிடும் வாதிக்கல் லோ வயித்தியத்தில் வாலைரசமாகச் சொன்னேன், வேதையிதிலொட் டாது ஆசியாதே வேதைக்குக் குறுவேரை விளம்பக்கேளே. 1454

விளம்புவேன்மாலை ரசங்கண்டிடைக்கிரட்டி மீறியதோர் கெந்தி யிடுசிலைபத்தொன்று, வளம்பெறவேபொற்றலையின் சாற்றுலாட்டு மாவட்டிரண்டுநாளரைத்த பின்பு, உளம்பெலக்கக்குப்பியிலேயுலர்சாத்

திவிடு உத்தமனேவாலுகையிற்றியை மூட்டு, தளம்பெறவே மூன்று நாள் புத்தியிட்டுத் தப்பாது தளமுறச் செந்தூரந்தானே. 1455

செந்தூரம்சிவப்பென்றால் முருக்கம்பூவொவ்வாதேகமதுக்கழவே துவயிரவனைப்பூசி, செந்தூரமெடுத்தடக்கிச் சிவனைப்பூசி தேவியொடு கணபதிக்குப்பூசைபண்ணு, செந்தூரந்தின்பதற்குத் தீட்சைமுன்னே செயமாகக்காரியமோ டிலக்கணமுஞ் சொன்னேன், செந்தூரங்குன்றி யிடைமூதண்டத்தின் திறமானலேகியத்தில் பொதிந்துதிண்ணே.

திண்ணவேலேகியந்தான் முன்பேசெவ்வாய் தீட்சையிருநேற்றுள் ளேதிடமாய்ச் சொன்னேன், அண்ணலேலேகியத்தை யாருஞ்சொல்லா ரழகாகக்காசிடை லேகியத்திற்கொள்ளு, உண்ணவே மண்டலங் கொள்வயசுகண்டு உத்தமனேநோயென்ற தெல்லாம்போகும், அங்கமொடுபால்சீனிபத்தியந்தா னப்பனே மற்றொன்று மாகாதெக்கே. 1457

ஆகாது என்றுசொன்ன தேதென்றுக்கா லவமிருத்து தட்டுதத்துப் பத்தியம்வேணும், வாளகச்செந்தூரம் நோய் கொண்டோர்க்கு வளமா வனுபான மறிந்துகூட்டி, தாகான மண்டலமே குன்றி வீதஞ் சாற்றினேம் நோயெல்லாந் தவறுண்டே போம், வாகான பத்தியங்கள் காக்க வேண்டா மத்தியமாய் புகையிலையும் புளியுந் தானே. 1458

தானென்ற ரெண்டும் விட்டுக்கொண்டாற்கேளு தவறாது சகல வியாதிகளுந்தீரும், ஊனென்ற வுடம்பெடுத்தாற் சாகாக்கல்வி யுற்ற வனே யிதுக்கல்லோ தளஞ்செந்தூரம், மானென்றபெண்கள் வலைக் குள்ளேசிக்கி மாள்வதற்கோ செந்தூர வைப்பைச் சொன்னேன், தானென்ற பொய்விட்டு தன்னைக்காணுஞ் சாதகமாய் லட்சியத்திற்குறி வைப்பாரே. 1459

பாரப்பா வாசியினல் யோகமாகும் பரிவான தீட்சையினாற் சித்தியாகும், காரப்பா சாபமெல்லாம் நிவர்த்திசெய்து கற்பத்தில் முதல் கற்பங்காந்தங்கொள்ளு, சேரப்பாசித்திபெற்ற கெதியினாலே செந்தூரமெடுத்தாலே தெளிந்துகாணும், பேரப்பா கேட்டுடனே எமதூதர்கள் பேசாதே யோடுவர்காண் பின்பாராதே. 1460

பாராதே சித்தாந்தமொன்றுமில்லை பஞ்சகர்த்தாள் சட்லவேகு மட்டுஞ், சேராதே யென்றுசொல்லும் வேதாந்தத்தை தெரிந்தறிய மாட்டார்கள் சைவமாடு, கூராதே பூரணமே தெய்வமன்றிக்கோவிலு

க்குட்சுயம்புவந்து பாதாரத்தைச், சோாதேயிருப்பதென்ன வென்று சொல்லி செப்பேடாசித்தாந்தத் தெளிவாமாட்ட. 1461

தெளிவானமனத்தோர்க்கு வாதஞ்சொன்னேன் திட்மற்ற மூட ருக்குத்திட்மூஞ் சொன்னேன், :தெளிவானமனத்தோர்கு வயித்தியஞ் சொன்னேன் செய்முறைக்குக் கற்பத்திநெறியுஞ்சொன்னேன், தெளி வானமனத்தோர்க்கு நூலுஞ்சொன்னேன் சித்தியுடன் முத்திபெற யோகஞ்சொன்னேன், தெளிவானமனத்தோர்க்கு மவுனஞ்சொன்னே ன்தீட்சையொடுபூசைவிதி செப்பினேனே. 1462

செப்பினேன்வாதத்திலட்சங்காப்பு திறமானவயித்தியத்தில் ரண் டுலட்சம், செப்பினேன்வாதநூலாயிரந்தான் தெளிவானரெண்டு கண் டந்திரத்தைத்தேர்ந்து, செப்பினேன்சூதந்தானிருநூரப்பா தீட்சைவி திபிருநூறுந்தெளிவாச் சொன்னேன், செப்பினேன்ஞானமாயிரந்தான் தேர்ந்து தெளிவாகவிருநூறுந் திறந்திட்டேனே. 1463

திறந்திட்டேன் வயித்தியத்திற் குறுக்கிலட்சஞ் செப்பினேன திற்பாதியதனைத்தேர்ந்து, திறந்திட்டேன வாதத்தின் சூத்திரம்போற் றெளிவாகவயித்தியத்திற்சூத்திரஞ்சொன்னே, சிறந்திட்டேனிவ்வண் ணமாகமூன்றுஞ் சிறுபிள்ளைக்கானுலும் வயித்தியந்தான், திறந்திட் டேன் பூரணசூத்திரந்தானப்பா, செயவிருபத் தோராயிரத் தாறு நூறே. 1464

நூறுனவிருபத்து வென்றுங்காட்டி நுவலுமனுபவத்தினுல் நாலு காண்டம், வீறுனதிதைக்குறிக்கிச் சூத்திரம்போல் வெட்டவெளிபூர ணசூத்திரத்தைச் சொன்னேன், கூறுனதிருநூற்றுப் பதினுருக்குள் கொட்டினேன் சரிகையுடன் கிரிகைசொன்னேன், பேறுனயோகமொடு சூரணத்தோடு பிலத்தசுவாசந்தனிலேபணிக்காணே. 1465

காணப்பாவிட்டகுறை மார்க்கத்தோனும் கைவிட்ட சூஸ்திர மாய் வெளியிற்போட்டேன், தோணப்பாகற்பத்தி நேர்மையாவுந்துடி யாக குறுக்கியதைநூறுய் சொன்னேன், பேணப்பாகற்பநூ லிருநூ றுஞ்சொன்னேன் பிலத்தமாந்திரிகைமைந்நூறுஞ் சொன்னேன், நூ ணப்பாயிந்திரமு மயேந்திரஜாலம் பூட்டினேனுயிரந்தான் புகழ்ந்து பாரே. 1466

பாரப்பா வடிவெடுத்து கற்பங்கொண்டு பரிவாகவுண்டுவருங்கால ந்தன்னில், தாரப்பாவாதமொ பித்தத்தாலே சனித்தசிலேற்பனத்தா லேதாறுமாறுந், தூரப்பாபாரமாக கற்பங்கொண்டு சுழற்றுநீயலையாதே நோய்கள்போக, காரப்பா செந்தூரமினங்கள்தோறுங் கட்டாய்செந் தூரித்து கடக்கவையே. 1467

வையப்பாகற்பங்கள் கொள்ளுமுன்னே வகையானலேகியங்கள் சூரணங்கள், செய்யப்பாகிருதங்கள்தயிலமொடு கெட்டியாய் செய்து கொண்டு கிரமத்தோடே பொய்யாகவுரைப்பதென்ன புத்திசொன்னேன் புலத்தியனேவதுக்குரைத்த பத்தியமப்பா, மெய்யாகுமென்றோர்க்கு மெய்பாய்நிற்கு விளம்பவென்றால் பொய்யாகும் விளம்பக்கேளே. 1468

கேளப்பா கற்பூரசலாசத்துத்தான் கெடியாகபலமொன்று பொரிகாரந்தான், நாளப்பாபலமொன்று ரெண்டுங்கூட்டி நலமானபருத்திவேர் அத்திவேர்த்தோல், நீளப்பாபாங்காகக் கியாழஞ்செய்து நிசமாக விட்டுவாட்டு வொருநாள்மட்டு, மாளப்பாவஞ்செருவிற் புடத்தைப் போட்டு ஆறியெடுகல்வத்திலாட்டத்தானே. 1469

ஆட்டத்தூளாகுமடா வெண்கருவைவிட்டு யரைத்து வில்லைசெய்துாவியுலர்த்திக் கொண்டு, மாட்டவேயஞ்செருவிற் புடத்தைப்போட்டு வாகாகவரைத்தரைத்து வஞ்சுதரமானல், நாட்டவே வெண்பொடியாமதனையுண்ண நலமானபெருவயறு மகோரங்குஷ்டம், ஓட்டப்பாநீர்ச்சிறப்புகல்லடைப்பு மோடுமப்பா வெடியுப்புச்சுண்ணமீரே. 1470

வெடியுப்புப்பலம்பத்து பூநீறுபத்து வேகமடா பழச்சாறுசாமமட்டு, அடியுப்புக்காண்டியிலே வார்த்துவைத்து அப்பனேகொதிக்கவைக்கசுண்ணமாகும், கொடிதப்பா பீங்கானில்நீறதாகுங் கூறினேன் வயித்தியனுடவுப்புநீறே, துடியப்பாசலாசத்துத் தனக்கு முன்னே தோயப்பாதலேநோயுந்தணியுமன்றே. 1471

வேறு-காமரசம்.

தணிந்தகாமரசந்தன்னைச் சாற்றக்கேளு பெரும்பாடும், கணிந்தேபோகு மெலும்புருக்கி தாதுநட்டம்பிரமேகம், தணிந்தேபோகுமூலவ்ஷணங்கள் சகலசாங்கள்பண்புடனே, தணிந்தேபோகும்நீரிழிவு மரோசிகாந்தல்வாந்தியுமே 1472

தூதுவளம்பூ முருக்கம்பூ சொல்லும் வகைக்கு நன்னாரி, பாதநெரிஞ்சிலே நிலப்பனையு வகைக்கோர்பலமாகும், ஓதுமதுரம் நன்னாரி வொவ்வோரிரண்டாஞ் சதாவேலிப், சோதமூன்று பலமுலர்த்திப் பொடித்தூள் வடியுங்கண்டதுவே. 1473

கண்டபசுவின்பால் பதக்குகாச்சிப் பின்னேப்பொடித்தூவிக், கிண்டித்திரண்டு வரும்போது கிளர்சர்க்கரைதேன் நெய்மூன்றும், கொண்டவகைக்கோர் படிவிட்டுக் கூட்டித்தான்றிக் காயளவு, வண்டலுண்டு புளிகசப்பு மருந்தார்பெருமை வகைகேளிர், 1474

பெரும்பாடட்டேனே யெலும்புருக்கி பிறமேகங்க ளோடிப்போம்த ருக்காதுகளு மிகவுண்டாஞ் சாறுங்காணமிவையொன்று, வரும்பார்வ திக்குவெள்விடை யொன்மகிக்தேயருள் செய்ததுதா, னிரும்பாருலகி லிதுபெரிதா வெந்தமருதுஞ் சிறிதாமே. 1475

பலாட்சசூரணம்.

ஆமாம்பாலாட்ச சூரணத்தை யறையக்கேளும் புலத்தியனே, ஆமாமுந்திரி பேரீச்சுமக்கிழுகாம ரதிமதுரம், ஆமாஙகோஷ்டங்கொத்த மல்லி யமுக்கிருவேர் கடாமாஞ்சி, ஆமாமேலமிலவங்கப் பத்திரிபட் டைபாத்தையெட்டே. 1476

எட்டாஞ் சாதிக்காய் பத்திரிகிரும்பு மிருகசிரகமொடு, எட்டாங் திரிபால் திரிகடுகுமினியதாளிசப்பத்திரியும், எட்டாஞ்சிறுநாகப்பூவு மிலாமிச்சம்வேர் வால்மிளகு, எட்டாஞ் செவியம் நன்னாரி கீழ்க்காய் நெல்லி நெற்பொரியே. 1477

பொறிசிற்றரத்தை நல்லகெந்தம்புகழ்சேர் வெட்டிவேர்தகர, மரி தாரந்திப்பிலி மூலமொடுசமமாககுருசாணி, விரிவாமளிப் பழத்தோடு மேன்மை சொருந்தக்கோலமல்லால், தெரிதற் கூகைநீறுமுத்தக்கா சுஞ் சமனுய்சேர்கழஞ்சே. 1278

சேரக்கழஞ்சாய் காயவைத்து யிடித்துதூளேவடிசெய்து, காரமு டையவங்காளச் சீனிசமனுய்கலந்தபின்பு, சாரமுடனேபுதுக்கரகந்த ன்னிலடக்கியனுபானம், நேரமறிந்து தேனிஞ்சிச்சாறும் நறுநெய் நீட்டிடுமே. 1479

இடுமே அந்திசந்தி லொருகடியா யொருமண்டலமிணங்கக், மகா மேயதனற் குணங்கேளு மருட்டும்வாந்தி நெஞ்செரிப்பு, விடுமேயங் திசுரம் வெட்டைமேகந்தா து நட்டமுதல், படுமேயிருமல்களைச்சூடும் பணைப்பும்வாய்வும் பறந்திடுமே. 1480

வேறு.

பறந்திடக்களேமே லந்தசுரம் போகக்கியாழங்கேளு, திந்திட்டே ன்வற்பூலாவேர் வில்வவேர்சிற்ருமுட்டி, யமைந்திட்டேன் விஷ்ணுகாந் திகன்னாரியிவை யோடைந்தும், குறைத்திடாதெவ் வொன்றுக்கும் பலஞ்சுக்குமிளகு கூட்டே. 1481

கூட்டடா யிரண்டு மொன்றுக்கரைபாலுந் தானுமாக, நாட்ட டாகட்டியஞ்சு கூறிட்டு வொருகூறுக்கு, மூட்டடாசலமிரண்டுபடிவிட் டுயெட்டொன்ருக்கி ஆட்டடா வந்திசந்தி யசூடுகளையுமாறும். 1482

மாறுமேக மலைசுரங்கள் வந்துளபலநோயுந்தான், வீறுமேயடங்கிப்போகும்வேறொரு குணமுமில்லை, தேறமே வியாதியெல்லாந்தெளியுமேசிந்தையில்லை ஆறுமே மருந்தில்நோய்களாண்டாதுவருளுமே.

வேறு-சொர்ணகிருஷ்ணவயிரம்.

ஆமப்பா புலத்தியனே சொர்ணகிஷ்ண வயிரவத்தையறைகிறேனன்பாய்கேளு, ஆமப்பாதங்கம்ரெண்டு காகதன்னை யச்சமாய்லேசாகத்தகடுதட்டி, ஆமப்பாசாதிலிங்கம் கழஞ்சுநாலுமதுவுடனே சவ்வீரம்வெண்காரமணியும், ஆமப்பாசுத்திசெய்து தகட்டில்வைத்து அடைவாகப்பொதிந்தபின்புமறைகிறேனே. 1484

அறைகிறேனொருசட்டிக்குள் கற்சுண்ணமளந்தொருபடிபோட்டதிலேதானும், குறையாமலொருபடிசாருயம்விட்டு கூறுமநீற்றியதைக்குகையுஞ்செய்து, நிறையாகசட்டிக்குள் குகைநடுக வைப்பாய் நீதியாத்தங்கத்தின்தகட்டு பொட்டணத்தை. மறையாமல் பதியவைத்து மேலுஞ்சாராயம் வழுவாமலரைபடியும் விட்டிடாயே. 1485

விட்டபின்பு கற்சுண்ணநீறாய்மூடி மேற்சட்டி கவித்துமேசீலமண்செய்து, சட்டமாய் விநாயகனைபூசைசெய்து தாயாரை யர்ச்சித்து அடுப்பிலேற்றி, இட்டமாய்தியானித்துகமலவன்னி யெரியிடுவாயிருசாமம் செந்தூரமாகு, மஷ்டதிக்கும் வெல்லுமடா சகலநோய்க்குமாணியடாயனுபானத்தாட்டு அட்டே. 1493

ஆட்டடா கோழிமுட்டைத்தயிலம்வாங்கி யதிலேதானிருகழஞ்சுதயிலந்தன்னில், பூட்டடாசெந்தூரம் பணவிடைதானென்றுபோதிரண்டு மண்டலந்தான்பூட்டுபூட்டு, ஓட்டடா மவுனமற்றபசாசு பேய்கள் முரணனக்ஷயகாசம் குன்மகஷ்டம், நீட்டடா மேகவகை நீரிழிவுசோகை நில்லாதகிராணியொடு பவுத்ரங்கள்போமே. 1494

போமப்பாபவுத்திரங்கள் கரப்பனோடு கிரந்திபுண்பொடிகளரைப்புடைத்தவிரணம் போமப்பாவிஷபாகம் பாண்டு பெருவயறுபொல்லாதபித்த காமாலையொடுசோகை, போமப்பாமூலமூளைபீனிசம் நீர்ப்பால்லல் பொருமலொடுதக்கமல்லா வீளையிருமலுந்தான், போமப்பா பலரோகமெல்லாம்போகும் பிணியறிந்துவனுபானம்பூட்டலாமே.

ஆமப்பாவாகடத்திற் சூத்திரனத்தையெல்லா மறைந்திட்டேனனுவொன்றுமடக்கமில்லை, வேமப்பாநோயெல்லாம் படுநீபற்றும் வேறுள்ள நோய்களெல்லாம் விபரமில்லை, சோமப்பாவிந்தநூல் தொகையேதென்றால் சொல்லுகிறேனுபிரத்தைந்நூறுஞ் சொல்லும், நாமப்பாவுள்ளபடி சொல்லிவைத்தோ நாதாக்கள்கடாட்சத்தால் சூத்திரந்தான்முற்றே. 1500

அகத்தியமுனிவரருளிச்செய்த வயித்தியகாவியம்-௲௫௱

முற்றிற்று.

உ

கடவுள் துணை.

அகத்தியமுனிவ ரருளிச்செய்த பெருநூல்

## வயித்தியகாவியம்-௲௫௱

# அட்டவணை.



அகஸ்தியர் வயித்திய காவியம் அட்டவணை.

முற்றிற்று.



டி. சாரதா புத்தக சாலை,
நெ. 23, பாளையப்பன் தெரு, மின்ட் போஸ்டு, மதராஸ்.